Regd. M. No 7897 | NAVAMANI (Tamil Daily) MADRAS | Phone No. 76199

"நவமணி"
சந்தா விகிதம்
1—9—74 முதல்
தனிப் பிரதி 2 காசு

| | ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7.50 | ரூ. 8.00 |
| 3 மாதம் | ரூ. 22.50 | ரூ. 24.00 |
| 6 மாதம் | ரூ. 45.00 | ரூ. 48.00 |
| 1 வருடம் | ரூ. 90.00 | ரூ. 96.00 |

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

ஆசிரியர்: K. சோமசுந்தர் (சோலை)

சினிமா செய்திகள்
4-ம் பக்கம்

மலர் 16 இதழ் 191 ★ 25—3—76 வியாழன் ★ வெளியூர் 26—3—75 வெள்ளி ★ 4 பக்கம் 25 காசு

## ஐந்தாம்படை: எம். ஜி. ஆர். எச்சரிக்கை

சென்னை, மார்ச் 25— ஊழல் மிக்க திமு கழக ஆட்சியை அகற்றுவதில் ஒன்றுபட்டு நின்ற காங்கிரஸ், அண்ணா திமு கழகம், இந்திய கம்யூனிஸ்டுகட்சி மற்றும் அண்ணா தி. மு. கழகத்தின் தோழமைக் கட்சிகளிடையே பகைமை உணர்வை ஏற்படுத்த சிலர் முயற்சிப்பதாக அண்ணா தி. மு. கழகத் தலைமை நிலையத்திற்கு தகவல்கள் வந்துள்ளன.

இந்திய நாட்டின் ஒற்றுமையிலும், பிரதமர் இந்திராவின் இருபது அம்சத் திட்டங்களை செயல்படுத்துவதிலும் ஒரு அணியில் நிற்கும் கட்சிகளிடையே பகைமை உணர்வை ஏற்படுத்துபவர்களிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்; பொறுமையாக இருக்க வேண்டும் என்று அண்ணா திமு கழகத் தொண்டர்களை எம். ஜி. ஆர். கேட்டுக்கொண்டு இருக்கிறார்.

அவர் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:

"நமது தோழமைக் கட்சிகளுக்கும், நம்மோடு நல்லெண்ணம்கொண்டு அன்புத் தொடர்பு வைத்துக்கொண்டுள்ள ஏனைய கட்சிகளுக்கும் நமக்கும் இடையே நாம் விரும்பாத — நாம் ஏற்றுக் கொள்ள முடியாத பூசல்களை ஏற்படுத்தி நமக்கு அவர்களோடு இருக்கும் உறவுகளைத் துண்டிக்க சில ஐந்தாம்படைகள் அங்கங்கே முயற்சிகள் செய்து வருவதாக எனது கவனத்திற்குத் தகவல்கள் வருகின்றன. எனவே அத்தகைய ஐந்தாம் படைகளை அவர்கள் சம்பந்தப்பட்ட கட்சியிலிருந்து வெளியேற்றப்படும் வரை நாம் அமரர் அண்ணா அவர்களின் வழியில் பொறுமையைக் கடைப்பிடித்தே ஆகவேண்டும். உண்மையை உலகுக்கு உணர்த்தும் நம் பணிகளில் அமரர் அண்ணா அவர்கள் காட்டிய அறவழியில் வெற்றி காணவும், அமைதியைக் கடைப பிடித்து வரவேண்டும், கருணாநிதி கட்சியின் தாக்குதலுக்கு ஈடுகொடுத்து அறவழியில் தியாக உருவங்களாக எப்படி நீங்கள் மாறினீர்களோ அதே போல் மற்றவர்கள் உண்மையை உணரும் காலம்வரும். அதுவரை நாம் அமைதியோடு பொறுமையோடு கட்டுப்பாட்டோடு செயலாற்றவேண்டும்.

### எத்தனை தியாகம்?

ஆத்திரம் ஊட்டுவார்கள அறுவறுப்பை ஏற்படுத்துவார்கள்.

அவல சூழ்நிலைக்கு வித்திடுவார்கள்.

நம்மை மறவழி செல்பவர்கள் என்று உலகுக்கு எடுத்துக்காட்ட வலியத் தாக்குவார்கள். ஏசுவார்கள்.

இதற்கெல்லாம் சவலைப்படாது பொறுமையோடு சுமுகச் சூழ்நிலையை உருவாகக் நமது கடமையை ஆற்றிவரவேண்டும்.

எத்தனை பொய் வழக்குகள்? எத்தனை உயிர் தியாகங்கள்? எத்தனை உடைமை இழப்புக்கள்?

### அறவழி மறவாதீர்

இவை அனைத்தையும் ஏற்று மூன்றரை ஆண்டுகள் பொறுத்திருந்து கருணாநிதி கட்சியின் அராஜக அநியாய கொடுங்கோல் ஆட்சிக்கு முற்றுப் புள்ளி வைக்கப்பட்டது என்பதையும், துன்பத்தை ஏற்றாலே தவிர அரசியல் தோல்வியை ஏற்கவில்லை என்பதும் அமரர் அண்ணாவின் அறவழி இதனைத்தான் வரலாருக என்று உலகிற்கு எடுத்துக் காட்டியிருக்கிறது என்பதனையும் உணர்ந்தவர்கள் நீங்கள்.

உணர்ந்து அதே அறவழியில் அமைதிப் பாதையில் செயல்பட வேண்டும் என்று பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

எல்லாம் தெரிந்த உங்களுக்கு இந்த விளக்கம் போதும் என்று நம்புகிறேன்.

இவ்வாறு அண்ணா தி. மு. கழகப் பொதுச் செயலாளர் எம். ஜி. ஆர். ஒரு அறிக்கையில் கூறியிருக்கிறார்.

"சோலை"

# அண்ணா தி. மு. க. விசாரணை கமிஷன்

## எம். ஜி. ஆர். அறிவிப்பு

சென்னை, மார்ச் 25—அண்ணா தி. மு. கழக ஊழியர்கள் மீது கூறப்படும் புகார்களை விசாரிக்க ஓய்வு பெற்ற நீதிபதியைக் கொண்டு எம். ஜி. ஆர். ஒரு விசாரணைக் கமிஷன் அமைத்து இருக்கிறார்.

செங்கல்பட்டு மாவட்ட செஷன்சு நீதிபதியாகப் பணியாற்றி ஓய்வு பெற்ற நீதிபதி இ. எஸ். வெங்கடேசன் விசாரணைக் கமிஷன் நீதிபதியாக நியமிக்கப் பட்டிருக்கிறார்.

இந்திய அரசியல் வரலாற்றிலேயே எந்த ஒரு கட்சியும் தனது கட்சி ஊழியர்கள் மீது கூறப்படும் புகார்களை விசாரிக்க விசாரணைக் கமிஷன் அமைத்தது இல்லை. அந்தப் புதுமையை வழிகாட்டியாக எம். ஜி. ஆர். ஏற்பாடு செய்து இருக்கிறார்.

இதுபற்றி அண்ணா தி. மு. கழகப் பொதுச் செயலாளர் எம். ஜி. ஆர். ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:

அண்ணா தி. மு. கழக உறுப்பினர் மீது எந்தக் குற்றச்சாட்டுக் கூறப்பட்டாலும் அது பற்றி விசாரணை செய்து தீர்ப்புக் கூறும் பொறுப்பை ஓய்வு பெற்ற நீதிபதியிடம் விடப்படும் என்று ஏற்கனவே பலமுறை அறிவித்து இருக்கிறேன்.

அதற்கு இணங்க செங்கல்பட்டு மாவட்ட செஷன்சு நீதிபதியாகப் பணியாற்றி ஓய்வு பெற்ற இ.எஸ். வெங்கடேசன் அண்ணா தி. மு. கழகத்தின் ஒரு நபர் கமிஷன் நீதிபதியாக நயமிக்கப்பட்டு இருக்கிறார். பொது வாழ்வைத் தூய்மைப் படுத்த இந்தியத் துணை கண்ட வரலாற்றிலேயே எந்தக் கட்சியும்செய்யாதஒரு ஏற்பாட்டை விசாரணைக் கமிஷன் ஏற்பாட்டை அண்ணா தி. மு. கழகம் செய்து விட்டது இதனை உணர்ந்து நீதிபதி அவர்களின் பணியினைப் பயன் படுத்திக் கொள்ளும்படி வேண்டிக் கொள்கிறேன்.

இவ்வாறு அண்ணா தி. மு. கழகப் பொதுச் செயலாளர் எம். ஜி. ஆர். ஒரு அறிக்கையில் கூறியிருக்கிறார்.

### நீதிபதி முகவரி

அண்ணா தி.மு.க.வில் எந்த உறுபபினர் மீதாவது புகார் கூற விரும்புகிறவர்கள் அதனை கீழ்க்கண்ட முகவரிக்கு விசாரணைக்கு அனுப்பலாம்.

இ. எஸ். வெங்கடேசன்,
ஓய்வு பெற்ற நீதிபதி 2. ஏ.
ஜெயபாரதம் இல்லம்,
பிலிம் டைரக்டர் காலனி ரோடு,
அண்ணா நகர், கோடம்பாக்கம் சென்னை-24

## கலெக்டர் வீட்டில் சோதனை?

சென்னை, மார்ச் 25— கோவை மாவட்டக் கலெக்டராக இருந்த லட்சுமிகாந்தன் பாரதி வீட்டில் சோதனை நடந்ததா இல்லையா என்பது பற்றி மாநில அரசுக்குத் தகவல் இல்லை என்று தமிழக அரசுத் தலைமைச் செயலாளர் கார்த்திகேயன் நிருபர்களிடம் கூறினார்.

மத்திய அரசின் ரகசிய புலனாய்வுத்துறையினர் சோதனை நடத்தியிருக்கக் கூடும்.

பரிசுச் சீட்டுக் திட்டத்தை மீண்டும் செயல் படுத்துவது பற்றி ஆலோசித்துவருகிறோம்

ஊட்டியில் குதிரைப் பந்தயம் நடத்த அனுமதிக்கப்படும் என்றும் அவர் கூறினார்.

## தமிழில் தீர்ப்பு: அரசு உத்தரவு

சென்னை, மார்ச் 25— ஐகோர்ட்டுக்கு உட்பட்ட கோர்ட்டுகளில் தமிழ் புத்தாண்டில் இருந்துதமிழில தீர்ப்பு வழக்கவேண்டும் என்று திமுக அரசு உததரவு இட்டிருந்தது அல்லவா?

அந்த உத்தரவை தாற்காலிகமாக நிறுத்தி வைத்து தமிழக அரசு தற்போதுஉத்தரவிட்டிருக்கிறது.

சட்ட புத்தகங்கள் சரியாக தமிழில் மொழி பெயர்க்கப் படவில்லை என்று வக்கீல்கள் சங்கம் தமிழில் தீர்ப்புவழங்குவதற்கு ஆட்சேபம் தெரிவித்து இருநதது.

இதையடுத்து தி. மு. க. அரசின உத்தரவை தமிழக அரசு மறுபரிசீலனைசெய்தது.

தமிழில் சட்ட புத்தகங்கள் இல்லாததால் தி.மு.க. அரசு பிறப்பித்த உத்தரவை தற்காலிகமாக நிறுத்திவைத்து தமிழக அரசு உத்தரவிட்டிருக்கிறது.

## சஞ்சய் காந்தி வருகிறார்

சென்னை, மார்ச் 25— இளைஞர் காங்கிரஸ் தலைவர் சஞ்சய் காந்தி மே மாதம் முதல் வாரத்தில் தஞ்சை வருகிறார்.

சிவாஜி மன்றத்தினர் ஏற்பாடு செய்திருக்கும் 20 அம்ச திட்ட பயிற்சி முகாமில் அவர் கலந்து கொள்வார் என்று அகில இந்திய சிவாஜி கணேசன் ரசிகர் மன்றத் தலைவர் சின்ன அண்ணாமலை தெரிவித்தார்.

இந்த பயிற்சி முகாமில் சிவாஜியும் கலந்துகொள்வார்.

## மாவட்ட தலைவர்கள்

சென்னை, மார்ச் 25—மாவட்டக் காங்கிரஸ் தலைவர்கள் பெயர் பட்டியல இன்று அதிகார பூர்வமாக தமிழ் நாடு காங்கிரஸ் தலைவர் கருப்பையா மூப்பனார் அறிவிப்பார் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

தென் சென்னை மாவட்ட காங்கிரஸ தலைவராக ஏ. ஜே. தாஸ் வடசென்னை மாவட்ட காங்கிரஸ் தலைவராக ஆறுமுகம், செங்கல்பட்டு மாவட்ட (தெற்கு) தலைவராக மணலி ராமகிருஷ்ண முதலியார் செங்கல்பட்டு மாவட்ட (வடக்கு) தலைவராக வெங்கட சுப்பராசு, தென் ஆற்காடு மாவட்டத் தலைவராக இ. எம். சுப்பிரமணிய ரெட்டியார் ஆகியோர் பொறுப்பு ஏற்கின்றனர்.

திருவண்ணாமலை மாவட்டத் தலைவர்: டி. பட்டுசாமி வேலூர் மாவட்டத் தலைவர் பலராமன் எம். எல். ஏ.

சேலம் மாவட்டத் தலைவர் ராமசாமி உடையார்,

திருச்சி மாவட்டத் தலைவர்: சுவாமிநாதன்,

தஞ்சை மாவட்டத் தலைவர்: துளசி அய்யா வாண்டையார்: குமரி மாவட்டத் தலைவர்: டென்னிஸ். ராமநாதபுரம் மாவட்டம் (கிழக்கு) ஜெயலட்சுமி எம். பி. மேற்கு மாவட்டத் தலைவர் பாகனேரி உ. சுப்பிரமணியம் ஆகியோர் பொறுப்பு ஏற்கிறார்கள்.

## சினிமா வரி குறைப்பு: ஆர்.எம்.வீ. கோரிக்கை

சென்னை, மார்ச் 25— தமிழ்நாட்டில், சினிமா வரியைக் குறைக்க வேண்டும் என்று கோரி பிரதமர் இந்திரா காந்திக்கும், நிதி மந்திரி சி. சுப்பிரமணியத்திற்கும் தென் இந்திய சினிமா உற்பத்தியாளர்கள் சங்கம் மகஜர் அனுப்பியுள்ளது. இந்தத் தகவலை அதன் தலைவர் ஆர். எம். வீரப்பன் இன்று சென்னையில் நிருபர்களிடம் வெளியிட்டார்.

மகஜரில் கூறப்பட்டுள்ளதாவது:—

"தமிழ்நாட்டில் கருணாநிதி ஆட்சியின்போது சினிமா தொழில் கடுமையான தாக்குதலுக்கு ஆளாயிற்று.

தமிழ்நாட்டில் ஜனாதிபதி ஆட்சி ஏற்பட்ட பிறகு, மத்திய அரசாங்க பட்ஜெட்டிலும் மாநில அரசாங்க பட்ஜெட்டிலும் வரிச் சலுகை எதிர்பார்த்தோம், ஆனால் கிடைக்கவில்லை. ஆகவே இது பற்றி மறுபரிசீலனை செய்ய மத்திய அரசு முன் வரவேண்டும்.

தமிழ்நாட்டில் சினிமா வரி 60 சதவிகிதத்திலிருந்து 70 சதவிகிதமாக உயர்ந்துள்ளது

மற்ற மாநிலங்களைவிட தமிழ்நாட்டில் சினிமா வரி அதிகமாக உள்ளது. ஆகவே தமிழ்நாட்டில் சினிமா தொழிலுக்கு வரிச்சலுகை தரப்பட வேண்டும் என்று அந்த மகஜரில் கூறப்பட்டுள்ளது.

## பஸ் ஊழியருக்கு பெயர் பட்டை

சென்னை மார்ச் 25—டிரைவர்கள், கண்டக்டர்களுக்கு அவர்களது பெயர் பதித்த பாட்ஜிகளை வழங்க அரசு முடிவு செய்திருக்கிறது.

இந்த பெயர் பட்டைகளை டிரைவர்கள் கண்டக்டர்கள் தங்கள் வலது கையில் அணிந்துகொள்ள வேண்டும்.

## பிரகடனம்

நவமணி!

பத்திரிகை உலகத் திமிங்கிலங்களுக்கு இடையே உழைக்கும் கரங்களால் ஒரு நாளேட்டை வெற்றிகரமாக நடத்திட முடியும் என்பதனை உலகிற்கு அறிவித்த முதல் நாளேடு!

ஆசியாவிலேயே (சோஷலிச நாடுகளைத் தவிர) தொழிலாளர்களாலும் உழைக்கும் பத்திரிகையாளர்களாலும் துவக்கப்பட்ட ஒரே நாளேடு!

அந்த "நவமணி"யின் காலடிச் சுவடுகளை ஒரு முறை திரும்பிப் பார்க்கிறோம்!

அந்த "நவமணி"யின் ஓசையைத் தமிழகத்தில் மட்டுமல்ல, தமிழர் வாழும் உலகமெலாம் கம்பீரமாக ஒலிக்கச் செய்த அனைத்துப் படைப்புக் கரங்களையும் பணிவோடும் வணக்கத்தோடும் பார்க்கிறோம்.

அந்த "நவமணி" தமிழகத்து அரசியல் வானில் எல்லாத் தரப்பினரின் நிறைவான ஆதரவு பெற்று துருவ நட்சத்திரமாக ஒளி வீசிய அந்தப் பொன்மயமான காலத்தை எண்ணிப்பார்க்கிறோம்.

ஆனால் அந்த "நவமணி" இடையில் விபத்துக்குள்ளானது. அதனை அதன் லட்சியப் பாதையிலிருந்து அதிகாரச் சங்கிலியால் இழுத்துக்கொண்டு போனார்கள்.

1971-ம் ஆண்டிற்குப் பின்னர் தமிழகத்தைக் காரிருள் சூழ்ந்தது. அந்த இருள் "நவமணி"யையும் மொய்த்துககொண்டது.

ஏதோ "நவமணி"க்கு கனத்த மாலை சூடுவதாக ஊருக்குச் சொல்லிவிட்டு தி. மு. கழக அரசு அதன் பொன்மணிக் கழுத்திலே கருநாகத்தைச் சூட்டியது.

அதன விளைவு....? எழுதி விளக்க முடியாத நிலைமை!

அண்ணா தி.மு.கழகம் தோன்றிய பின்னர் ஆளும் வட்டாரத்தின் இரும்புப் பிடியிலிருந்து மீள "நவமணி" தொழிலாளர்கள் 40 நாட்கள் உழைக்கும் பத்திரிகையாளர் சங்கத் தலைமையில் போராடினர். என்றாலும் அன்றைய தி. மு. கழக அரசின் இரும்புக்கரம் காரணமாக வெற்றி எட்டாக் கனியாக நின்றது.

1976-ம் ஆண்டு ஜனவரி 31-ம் நாள் தமிழகத்தைக் கப்பியிருந்த காரிருள் நீங்கியது. "நவமணி"யைச் சூழ்ந்திருந்த இருளும் விலகத் துவங்கியது.

இந்த நிலையில் "நவமணி"த் தொழிலாளர்களும் ஊழியர்களும் நான் மீண்டும் "நவமணி"யில் பணி செய்ய வர வேண்டும் என்று ஒருமனதாக அழைத்தனர்.

"நவமணி"க்கு நான் பழைய ஊழியன். அன்று அகில இந்திய உழைக்கும் பத்திரிகையாளர் சங்கப் பொதுச் செயலாளர் டி. ஆர். ராமசாமி அவர்களும், ஆர். நரசிம்மனும், பி. கல்யாணசுந்தரமும் என்னை "நவமணி"க்கு அழைத்துச் சென்றார்கள். அன்றைக்கு "நவமணி" ஆசிரியராக இருந்த ஓ. ராமலிங்கம் அவர்கள் என்னை ஒரு ஊழியனாக ஏற்றுக் கொண்டார்கள். 1971-ம் ஆண்டு இறுதியல் நானே "நவமணி"யிலிருந்து விலகிச் சென்றேன்.

தற்போது ஒரு பொன்மனச் செம்மலின் உதவியால் எனக்கென்று ஒரு குடிசையைக் கட்டிக் கொண்டிருக்கும் நேரத்தில் "நவமணி"த் தொழிலாளர்களும் ஊழியர்களும் அழைத்தார்கள். "நீங்கள் தானே விலகிச் சென்றீர்கள்! நாங்களா உங்களைப் போகச் சொன்னோம்? எனவே வாருங்கள்" என்று அழைத்தார்கள். என்ன பதில் சொல்வது என்று தெரியாது திகைத்தேன்.

இன்றைக்கு நாடே பிரதமர் இந்திராவின் தலைமையில் எத்தகைய லட்சியத்தை ஏற்றுக் கொண்டு நடக்கிறதோ அத்தகைய ஒரு லட்சியத்திற்காக அன்றே துவக்கப்பட்ட ஒரு ஏடு—வாழ்க்கையோடு போராடிக் கொண்டே இன்னும் அதில் பணி செய்யும் தொழிலாளர்கள்; ஊழியர்கள்—என் மனக்கண்முன் நிழலாடினர்.

இவர்களோடு சேர்ந்து பணி செய்யாது ஓட்டம் பிடிப்பது உழைக்கும் வர்க்கத்திற்கே செய்யும் மாபெரும் துரோகம் என்ற முடிவுதான் இதயத்தில் இறுதியாக நின்றது.

என்றாலும், "நவமணி"யின் நாதம் அன்று போல் என்றும் ஒலிக்க அனைத்துத் தரப்பினரின் ஆதரவு தேவை;

2-ம் பக்கம் பார்க்க

# தொழிற் சங்கத் தலைவர் பொன் விழா

சென்னை, மார்ச் 25— ஐ.என்.டி.யு.சி. தொழிற்சங்கத் தலைவர் எஸ். எம். நாராயணனின் 50வது பிறந்தநாள் பொன்விழா இன்று கொண்டாடப்பட்டது.

எஸ். எம். நாராயணனின் வீட்டுக்கு இன்று காலையிலேயே தொழிற்சங்கத்தலைவர்களும் தொழிலாளர்களும் வந்து வாழ்த்து தெரிவித்துக் கொண்டனர்.

அதன்பிறகு எஸ். எம். நாராயணனும், விழா குழுவினரும் காமராஜர் சிலைக்கு மாலையிட்டு வணங்கினர்.

கடற்கரையில் உள்ள காந்திஜி, பாரதியார், விவேகானந்தர், அன்னிபெசண்ட் சிலைகளுக்கும், உழைப்பாளர் சிலைக்கும் மாலையிட்டனர்.

பார்த்தசாரதி கோவிலில் இன்று விசேஷ பிரார்த்தனை நடத்தப்பட்டது. அங்கிருந்து கொண்டுவந்த பிரசாதம் நாராயணனிடம் வழங்கப்பட்டது.

பிலிப்ஸ் தெருவில் உள்ள சங்க அலுவலகத்தில் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் கூடி நின்று நாராயணனுக்கு வாழ்த்து தெரிவித்தனர்.

விம்கோ, துறைமுக தொழிலாளர் தேசிய யூனியன், எல். ஐ. சி., பிரக் இந்தியா, வல்லை இந்தியா, சுந்தரம் கிளேடன், டாக் லேபர் யூனியன், அசோக் லேலண்டு, டாப்லஸ் நிறுவனம், ஆண்டிமன் சங்கத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் மாலையணிவித்து வாழ்த்து தெரிவித்தனர்.

பிறந்த நாள் கேக்வெட்டிய பிறகு கிறிஸ்துவ பாதிரியார் ஒருவர் பிரார்த்தனை செய்து ஆசீர்வாதம் செய்தார்.

சிம்சன் தேசிய தொழிலாளர் சார்பில் ஜோசப், அம்பிகாபதி, மணவாளன், ஆவிக்கோ மாலையணிவித்தனர். விம்கோ யூனியன் சார்பில் டி. கப்பிரமணியம் மாலையணிவித்து வாழ்த்து தெரிவித்தார்.

ஜி. கே. ஜெயராஜ், ஆர். வி. நாராயணசாமி, கி. எம், கமலநாதன், வேதாந்தராஜ் ஆகியோரும், வடசென்னை சிவாஜி ரசிகர் சங்கத்தலைவர் எழில்மணியும் மாலையணிவித்து வாழ்த்து தெரிவித்தனர்.

# தமிழ்நாட்டில் பொதுக்கூட்டம் நடத்த தடை நீடிப்பு

சென்னை மார்ச் 25—தமிழ் நாட்டில் பொதுக்கூட்டங்களை திறந்தவெளியில் நடத்த விதிக்கப்பட்டிருந்த தடை உத்தரவு மேலும் நீடிக்கும்.

போலீஸ் அனுமதியோடு பொது கூட்டங்களை ஹால்களில் நடத்தலாம்.

சென்னை நகரில் இத்தகைய கூட்டங்களை நடத்த போலீஸ் கமிஷனரின் முன் அனுமதி பெறவேண்டும்.

மாவட்டங்களில் இத்தகைய கூட்டங்களை நடத்த போலீஸ் சூப்பிரண்டெண்டுகளின் அனுமதி பெறவேண்டும்.

சென்னை ஹைக்கோர்ட்

# பிரதம நீதிபதியாக கைலாசம் நியமனம்

புதுடெல்லி, மார்ச் 25— சென்னை ஹைக்கோர்ட் நீதிபதி பி. எஸ். கைலாசம் ஹைக்கோர்ட்டின் பிரதம நீதிபதியாக நியமிக்கப்பட்டுள்ளார்.

பதவியிலிருந்து ஓய்வு பெறுவதற்கு முன்னதாக ரஜாவில் சென்றுள்ள பிரதம நீதிபதி கே. வீராசாமிக்குப் பதிலாக கைலாசம் பிரதம நீதிபதியாக நியமிக்கப்பட்டுள்ளார். கைலாசம் ஏப்ரல் 8-ந் தேதி தம்முடைய புது பதவிப் பொறுப்பை ஏற்பார்.

# பிரகடனம்

1-ம் பக்கத் தொடர்ச்சி

உழைக்கும் மக்கள், நடுத்தர வர்க்கத்தினர், நல்ல உள்ளம் கொண்ட முற்போக்காளர் அனைவரின் பேராதரவு தேவை!

தமிழ்நாடு காங்கிரஸ் துணைத் தலைவர் ஈ. வெ. கி. சம்பத் அவர்களைச் சந்தித்தோம். அவர் "நவமணி"யின் வளர்ச்சியில் என்றுமே நல்லார்வம் கொண்டவர். 'நவமணி' வளர்ந்தபோது தானே வளர்ந்ததாகக் கருதியவர். 'நவமணி' துவண்டபோது தானே துவண்டதாகத் துக்கித்தவர்.

"நவமணி"த் தொழிலாளர்களின் அழைப்பினை அவரிடம் தெரிவித்தபோது "உடனே பணியில் சேருங்கள். 'நவமணி' பழைய பாதைக்குத் திரும்பிட வேண்டும்" என்றார்.

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலப் பொது செயலாளர் எம். கல்யாண சுந்தரம் அவர்களைச் சந்தித்தோம். விவரம் கூறினோம்.

"என் சார்பாகவும், இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி சார்பாகவும் நல்வாழ்த்துக்கள். "நவமணி"யை எப்பாடு பட்டாகிலும் காத்திட வேண்டும். ஏனெனில் தொழிலாளர்களும் உழைக்கும் பத்திரிகையாளர்களும் சேர்ந்து துவக்கிய முதல் ஏடு தோல்வியடைந்தது என்று எவரும் கைகொட்டிச் சிரிக்கக் கூடாது" என்று எடுத்த எடுப்பிலேயே கூறினார். அந்தக் காலத்திலிருந்தே அவர் "நவமணி"க்குத் தோன்றாத் துணைவர்.

எத்தெந்தத் திசைகளிலிருந்து எத்தனை எத்தனை தடைகள் இன்னும் "நவமணி"யை எதிர்நோக்கியிருக்கின்றன என்பதை அவரிடம் விவரித்தோம். அத்தனை தடைகளையும் தாண்டிட இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி மட்டுமல்ல, ஆளும் காங்கிரசும், அண்ணா தி. மு. கழகமும் "நவமணி"க்கு ஆதரவாக அணி திரளும் என்று கூறினார்.

நவமணி, மக்கள் குரல், தென்னகம், நவசக்தி, சுதேசமித்திரன் ஆகிய ஏடுகள் வளரவேண்டும். நாடு எதிர்நோக்கியிருக்கும் நல்ல லட்சியத்தை நிறைவேற்ற முற்போக்கு முரசுகளாக ஒலிக்கவேண்டும் என்று இன்னும் ஒருபடி மேலே சென்று கூறினார்.

அடுத்து அண்ணா தி. மு. கழகப் பொதுச் செயலாளர் எம். ஜி. ஆர். அவர்களைச் சந்தித்தோம். எனக்குச் சோதனை வந்தபோதெல்லாம் அவர்தான் என்னைத் தேடிப்பிடித்து அணைத்துக்கொண்டவர். எதிர்காலம் இருண்டு தெரிந்தபோதெல்லாம் அவர் எனக்கு ஒளிவிளக்கு! 'நவமணி' ஊழியர்களின் அழைப்பை அவரிடம் தெரிவித்தபோது அந்த இதயக்கனியிலிருந்து வெளி வந்த நல்முத்துக்களை...இப்போது விவரிக்க விரும்பவில்லை.

"என் தம்பிக்கு என்றும்போல் ஆதரவு உண்டு. நவமணி மீண்டும் நாடெல்லாம் ஒலிக்கவேண்டும்" என்றார்.

அகில இந்திய உழைக்கும் பத்திரிகையாளர் சங்கப் பொதுச் செயலாளர் டி. ஆர். ராமசாமி என்னை ஒரு அன்னையைப்போல் அணைத்துக்கொள்ளவும் ஒரு தந்தையைப்போல் கடிந்துகொள்ளவும் உரிமை பெற்றவர். நீ 'நவமணி'யில் பணி செய்ய என் நல்லாசிகள் என்றும் உண்டு என்றார்.

இத்தனைக்கும் பின்னர்தான் "நவமணி" யில் பணி செய்ய இசைந்தேன்!

இன்னும் பல தலைவர்களைச் சந்திக்க முயன்றோம். இயலவில்லை. இனி அவர்களைச் சந்திப்போம்.

ஏற்கனவே நான் "மக்கள் குரலில்" பணி செய்ததை வாசகர்கள் அறிவர்.

இப்போது நான் "நவமணி" யில் பணி செய்வதால் "மக்கள் குரலுக்கு" விரோதி என்று பொருளல்ல.

இன்றைய அரசியல் சூழ்நிலையில் நவமணி, மக்கள் குரல், தென்னகம், நவசக்தி, சுதேசமித்திரன் ஜனசக்தி ஆகிய ஏடுகள் ஒரே குடும்பத்துப் பிள்ளைகள்! இன்றைக்கு ஒரே லட்சிய தாகம் கொண்ட ஏடுகள்! இந்தக் குடும்பத்தில் இதர ஏடுகளும் இணைந்து கொள்ளவேண்டும் என்பதே எங்கள் அவா.

எத்தனையோ பள்ளங்களையும், படுகுழிகளையும் கடந்து "நவமணி" இன்று முதல் புதிய பாதையில் அடியெடுத்து வைக்கிறது.

காங்கிரஸ் பிளவுண்டபோது தமிழகத்து அத்தனை ஏடுகளும் பிரதமர் இந்திராவுக்கு எதிராகவே நின்றன. ஆனால் அன்றைக்கே பிரதமர் இந்திராவை ஆதரித்தும், வலதுசாரி சக்திகளை அம்பலப்படுத்தியும் நின்ற ஒரே நாளேடு நவமணி! கட்சியிலும், ஆட்சியிலும் பிரதமர் இந்திரா எடுத்த ஒவ்வொரு நடவடிக்கையிலும் உண்மை எப்படி ஒளி வீசுகிறது, நியாயம் எப்படிப் பளிச்சிடுகிறது என்பதை விளக்கி "உண்மை சுடும்" என்ற தொடர் கட்டுரையை வெளியிட்டது.

1971-ம் ஆண்டுத் தேர்தலில் காங்கிரஸ் கட்சியின் கணக்குத் தீர்ந்துவிட்டதாக எல்லா ஏடுகளும் எழுதின. ஆனால் காங்கிரஸ் கூட்டணிதான் மகத்தான வெற்றி பெறும் என்று அறுதியிட்டு விமர்சித்தது "நவமணி" தான்.

இப்போது அதே பாதையின் அடியொற்றி "நவமணி" தனது பயணத்தைத் துவக்குகிறது.

இமயம் முதல் குமரி வரை நமது பூமி!

இந்த லட்சியத்தில் நம்பிக்கை கொண்ட எல்லா தேசிய சக்திகளுக்கும் "நவமணி" துணை நிற்கும்.

1971ம் ஆண்டிற்கு முன்னர் பிரதமர் இந்திரா அவர்கள் பத்து அம்சத் திட்டத்தை பறையறைந்தார். பாங்குகள் தேசியமயமாகின. இன்சூரன்ஸ் கம்பெனிகள் நாட்டுடைமையாகின. மன்னர் மானியங்கள் விடைபெற்றன. இந்திய சமுதாயம் ஒரு சலனத்தைக் கண்டது! ஒரு சாதனையைக் கண்டது.

இப்போது பிரதமர் இந்திரா அவர்கள் இருபது அம்சத் திட்டத்தை முரசறைந்திருக்கிறார். சலனம் கண்ட சமுதாய சாதனைச் சாலையில் பயணத்தைத் துவக்கிய சமுதாயம் ஓர் மறுமலர்ச்சி காணப்போகிறது. மன்னர்கள், மகாராணிகளைத் தொடர்ந்து ராவ் பகதூர் பகல் பகதூர்களைத் தொடர்ந்து நிலப்பிரபுக்கள் விடை பெறுகிறார்கள்! கிராமப்பகுதிகளில் புத்தொளி பரவுகிறது! கடத்தல்மன்னர்கள், பதுக்கல் பேர்வழிகள் சேர வேண்டிய இருப்பிடத்தில் போய் சேருகிறார்கள்.

இந்த இருபது அம்சத்திட்டத்தால் ஏற்படும் பலன்களை விளக்கவும், இந்தத் திட்டங்களை செயல்படுத்த நாட்டு மக்களை பிரதமர் இந்திரா தலைமையில் திரட்டுவதிலும் "நவமணி" தனது பணிவான பணியினைச் செய்யும்.

இந்தியாவின் சுதந்திரத்தை இரையாகக் கேட்கும் ஏகாதிபத்திய அன்னிய சக்திகளையும் இங்கே அதற்குத் துணை நிற்கும், முகமூடி சக்திகளையும், பிரிவினை, வகுப்புவாத சக்திகளையும் அம்பலப்படுத்துவதில் "நவமணி" முன்னணியில் நிற்கும்,

உழைக்கும் மக்கள், நடுத்தர வர்க்கத்தினரின் உரிமைக் குரலாக ஒலிக்கும்.

# நெல் பயிருக்கு பெயர் மாற்ற கோரிக்கை

கும்பகோணம், மார்ச் 25- 'கருணை நெல்', 'அஞ்சுகம் பயறு' முதலியவற்றின் பெயரை மாற்ற வேண்டும் என்று குடந்தை பகுதி தீவிர விவசாயிகள் அரசுக்கு கோரிக்கை அனுப்பியிருக்கின்றனர்.

# லாரி கவிழ்ந்து 6 பேர் காயம்

(நவமணி நிருபர்)

கும்பகோணம், மார்ச் 25— வலங்கைமானில் செங்கல் ஏற்றிவந்த லாரிஒன்று கவிழ்ந்ததில் 6 தொழிலாளர்கள் காயம் அடைந்தனர்.

# சென்னையில் நாளைய நிகழ்ச்சிகள்

மயிலை கபாலீஸ்வரர் ஆலயம்: பங்குனிப் பெரு விழா—விடையாற்றி கலை விழா: தெ. ஞான சுந்தரம் சொற்பொழிவு மாலை 6-30 மணி. சீர்காழி எஸ். கோவிந்தராஜன் இன்னிசை இரவு 9 மணி.

தென் இந்திய வர்த்தக சங்கம்: அரையாண்டு கூட்டத் துவக்க விழா, துவக்குபவர்: ஆர். வி. சுப்பிரமணியன், இந்திய வர்த்தக சங்க கட்டிடம் எஸ்பிளனேடு மாலை 5-15 மணி

தமிழ்நாடு என். ஜி. ஓ. யூனியன்—20 அம்சத்திட்டக் கருத்தரங்கு துவக்க விழா: தலைமை: சிவ. இளங்கோ துவக்குபவர்: நெ. து. சுந்தரவடிவேலு. மத்திய நூலகக் கட்டிடம் அண்ணா சாலை, மாலை 5-30 மணி.

இராமலிங்கர் பணி மன்றம் வார சொற்பொழிவுக் கூட்டம். உரை நிகழ்த்துபவர் ம. பொ. சிவஞானம், ராமலிங்கர் பணி மன்றக் கூடம், 6, போயஸ தோட்டம் கோபாலபுரம் மாலை 6-30 மணி.

பிரதமரின்

நடவடிக்கைக்கு

# இந்திராஜி - பக்தவத்சலம் தேசிய சங்கம் பாராட்டு

சென்னை, மார்ச் 25— தமிழ் நாட்டில் தி மு க ஆட்சியை அகற்றியதற்கு இந்திராஜி-பக்தவத்சலம் தேசிய சங்கம் பிரதமர் இந்திரா காந்திக்கு பாராட்டு தெரிவித்தது.

மயிலைத் தொகுதி இந்திராஜி — பக்தவத்சலம் தேசிய சஙக நிர்வாகக் குழுக் கூட்டம் கடந்த 16-ம் தேதி நடந்தது.

கே. ஜான் மைக்கேல் முன்னிலையில் நடந்த அந்தக் கூட்டத்துக்கு எஸ். பி. சுப்பையா தலைமை வகித்தார்.

1967-ல் முன்னாள் முதலமைச்சர் எம். பக்தவத்சலம், சி. என். அண்ணாதுரை தலைமையில் அமைந்த மந்திரி சபை பெருவாரியான விஷக் கிருமிகள் என்றும் அதற்குப் பின் மு. கருணாநிதி தலைமையில் அமைந்த மந்திரிசபை ஒட்டு மொத்தமாக விஷக் கிருமிகள் என்றும் சுட்டிக் காட்டியதை இந்திய மக்களும் குறிப்பாக தமிழக மக்களும் நன்கு அறிவார்கள் என்பதை இந்த சங்கம் சுட்டி காட்டியது.

ஜனவரி 31-ம் தேதி இரவு 9-00 மணியளவில் கருணாநிதி தலைமையில் பரவிய விஷக் கிருமிகளை பாரதப் பிரதமர் இந்திரா காந்தி அகற்றிவிட்டதற்கு இக்குழு பாராட்டு தெரிவித்தது. எனவே பொது மக்களுக்கு அரசாங்க அதிகாரத்தைக் கொண்டு அசெம்பிளி அங்கத்தினர்கள் செய்கின்ற வேலைகளை இச்சங்கம் பொது மக்களுக்கு இடையூறாக இருக்கும். சமூக விரோதிகளையும், தேசவிரோத சக்திகளையும் அகற்றிவிட்டு அன்றாடப் பிரச்சினைகளை இச்சங்கம் அணுகுமென்பதை உறுதி கூறியது.

இந்த சங்கம் 10 வட்டங்களிலும் சங்கங்களை அமைத்து ஆங்காங்குள்ள தேசியவாதிகளை ஒன்றாக இணைத்து இரு சர்க்கிள் காங்கிரஸ கமிட்டிக்கும் மேலே உள்ள ஜில்லா காங்கிரஸ் கமிட்டிக்கும் ஒத்துழைப்பு கொடுக்கும்என்றும் அவர்கள் கூட்டத்தில் தெரிவித்தனர்.

இந்த நிர்வாக கமிட்டி கூட்டத்தில் நிர்வாக கமிட்டி அங்கத்தினர்களும் விசேஷ அழைப்பாளர்களாக தொகுதி ஜில்லா அங்கத்தினர்களும் கலந்து கொண்டனர்.

# உள்நாட்டு விவகாரத்தில் தலையீடு: வெளிநாடுகளுக்கு சஞ்சய் காந்தி எச்சரிக்கை

பிகானீர், மார்ச் 25—இந்தியாவின் உள்நாட்டு விவகாரத்தில் தலையிடாதீர் என்று வெளிநாடுகளுக்கு சஞ்சய் காந்தி எச்சரிக்கை விடுத்திருக்கிறார்.

பிகானீர் மாவட்டத்தில் நடந்த மாபெரும் பொதுக் கூட்டத்தில் சஞ்சய் காந்தி பேசினார்.

அவர் பேசியதாவது:

இந்தியாவின் உள் நாட்டு விவகாரத்தில் அந்நிய நாடுகள் தலையிடக் கூடாது. அமைதியான வழியில் முன்னேற்றம் காண இந்தியாவை மற்ற நாடுகள் பின்பற்ற வேண்டும். இந்தியா அமைதியான முறையில் முன்னேற விரும்புகிறது.

அண்டை நாடுகளும் அமைதி வழியில் முன்னேற்றம் காணவேண்டும்.

அவசரநிலை அறிவிக்கப்பட்டபிறகு உற்பத்தி பெருகி இருக்கிறது. கடந்த 2 ஆயிரம் ஆண்டுகளில் இல்லாத முன்னேற்றம் — அவசர நிலை அறிவிக்கப்பட்ட பிறகு ஏற்பட்டிருக்கிறது.

கல்லூரிகளும் பள்ளிகளும் ஒழுங்காக நடைபெறுகின்றன. எந்த இடத்திலும் வேலைநிறுத்தம் நடைபெறவில்லை.

கடந்த சில ஆண்டுகளில் சில தீய சக்திகள் தலைதூக்க ஆரம்பித்தன. வேலைநிறுத்தம் செய்வது, நாட்டின் பொதுச் சொத்திற்கு சேதம் விளைவிப்பது ஆகிய நடவடிக்கைகளில் அவர்கள் ஈடுபட்டார்கள்.

## இளைஞர் கடமை

தாங்கள் செய்ய வேண்டுவது என்ன என்பதை பற்றி இளைஞர்கள் தாங்களேமுடிவு செய்து கொள்ளவேண்டும், காங்கிரஸ் கட்சியோ நானோ இளைஞர்களுக்கு புத்திமதிகூற முடியாது.

நாடு விரைவாக முன்னேற என்ன செய்யவேண்டும் என்பதை இளைஞர்களே முடிவு செய்யவேண்டும்

குடும்பக் கட்டுப்பாடு வரதட்சணை எதிர்ப்பு ஆகிய திட்டங்களை அமுல் நடத்த இளைஞர்கள் ஒத்துழைக்க வேண்டும். இவ்வாறு சஞ்சய்காந்தி கூறினார்.

ஐகோர்ட் தீர்ப்பு

# ஆலைக்கு அபராதம் ஊர்ஜிதம்

சென்னை, மார்ச் 25— அனுமதியில்லாமல்மின்சாரம் உபயோகித்ததாக திருப்பூர் ஜவுளி ஆலை ஒன்றுக்கு விதிக்கப்பட்டிருந்த அபராதம் ஐகோர்ட்டில் ஊர்ஜிதம் செய்யப்பட்டது.

அந்த ஆலைக்கு 92 ஆயிரம் ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டிருந்தது.

# திண்டிவனத்தில் மரகதம் சந்திரசேகர்: பிரும்மாண்ட வரவேற்பு

திண்டிவனம், மார்ச் 25—அகில இந்திய காங்கிரஸ் பொதுச் செயலாளர் மரகதம் சந்திரசேகருக்கு திண்டிவனத்தில் பிரும்மாண்டமான வரவேற்பு அளிக்கப்பட்டது.

புதுவைக்கு செல்லும் வழியில் 21-ம் தேதி காலையில் மரகதம் திண்டிவனம் வந்தார்.

தஞ்சை மாவட்ட பொதுச் செயலாளரும் முன்னாள் எம். எல். சி. யு.மான எத்திராஜும் அவருடன் வந்தார்.

தென்னாற்காடு மாவட்ட காங்கிரஸ் செயலாளர் திண்டிவனம் தங்கமணி, நகரமன்றத் தலைவர் டி. ஹீராசந்த், நகர காங்கிரஸ் தலைவர் நடேசன், செயலாளர் நரசிம்மன், முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் சண்முகக் கவுண்டர் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் மேலச்சேரி கோபால கவுண்டர் நகரமன்ற உறுப்பினர் கே. பலராமன் மரக்காணம் பஞ்சாயத்து யூனியன் துணைப்பெருந் தலைவர் வையப்பாக்கம் ஏழுமலை, தாலுக்கா தேசிய உழவர் சங்க தலைவர் அஞ்சூர் கோவிந்தசாமி, எம்எல் ராசகோபால் நாயுடு, வழக்கறிஞர்கள் சம்பத் மணி, ஏ. குணசேகரன், அப்பாவுபிள்ளை மயிலம் அழகானந்தகவுண்டர் பி. ராமச்சந்திரன், ஞானப்பிரகாசம் செட்டியார், ராசமாணிக்கம் செட்டியார். செஞ்சி தியாகி நடராசக் கவுண்டர், தாலுக்கா சிவாஜி ரசிகர் மன்ற அமைப்பாளர் பி. சிட்டிபாபு, நகர சிவாஜி மன்ற அமைப்பாளர் ராமசாமி, சிவாஜிமன்றத் தோழர் கன்வெங்கடேசன், பெருமாள் கந்தன், செயக்குமார், ஆர். ராமதாஸ் நகர காங்கிரஸ் துணைச்செயலாளர் பட்டாபி, 12, 13-வதுவட்ட காங்கிரஸ் தலைவர் பத்மனாபன், கே. செம்மனேரி மற்றும் நூற்றுக்கணக்கான காங்கிரசார் மாலை யணிவித்து வரவேற்றனர்.

உள்ளூர் அரசியல் நிலை, அதிகாரிகள் போக்கு ஆகியவை குறித்து ஊழியர்கள் சொன்னதை மரகதம் கேட்டார்.

பிறகு அவர் பேசுகையில் பிரதமரின் கரத்தை வலுப்படுத்தவேண்டியதன் அவசியத்தை வெளியுறுத்திப் பேசினார்.

# பள்ளியில் இருந்த குரங்கு

பம்பாய், மார்ச் 25— நேற்று காலை வடகிழக்கு பம்பாயில் உள்ள செம்பூரில் இருக்கும் ஒரு உயர்நிலைப் பள்ளிக்கூடத்தின் வகுப்பு அறை ஒன்றில் ஒரு குரங்கு உட்கார்ந்து கொண்டு நகர மறுத்துவிட்டது.

அதை விரட்ட அங்கிருந்தவர்கள் எவ்வளவோ முயன்றனர். ஆனால், அது துளிக்கூட அசைவதாகக் காணோம்.

தீயணைக்கும் படையினர் வர வழைக்கப்பட்டனர். தீயணைக்கும் படையினரும் மிகுந்த சிரமப்பட்டு அதைப் பிடித்தனர். அந்தக் குரங்கு இறுதியில் மிருகக் காட்சி சாலைக்கு கொண்டு செல்லப்பட்டது.

# ரத்தவாந்தி: தொழிலாளி சாவு

சென்னை, மார்ச் 25— ரத்தவாந்தி எடுத்ததன் காரணமாக ஒரு தொழிலாளி அதே இடத்தில் துடிதுடித்து செத்தார்.

அம்பத்துரை அடுத்த கள்ளிக்குப்பத்தை சேர்ந்தவர் கோவிந்தராசன்.

இவர் சென்னை பி அண்டு சி மில்லில் ஆயில் மேனாக வேலை பார்த்தார்.

இவர் தினமும் வீட்டிலிருந்து தொழிற்சாலைக்கு ரெயில் மூலம் வருவார் வேலை முடிந்ததும் ரெயில் மூலம் வீடு திரும்புவார்.

இரவு வீடு திரும்புவதற்காக பெரம்பூர் ரெயில் நிலையத்தில் காத்திருந்தார். திடீரென்று அவர் ரத்த வாந்தி எடுத்தார். சில நிமிடத்தில் அவர் மரணமடைந்தார்.

இவர் மரணமடைந்தது தெரிந்ததும் போலீசார் பிணத்தை கைப்பற்றி பரிசோதனைக்கு மருத்துவமனைக்கு அனுப்பிவைத்தனர்.

இவரது குடும்பத்திற்கு உடனடி நிவாரணமாக பி. அண்டு சி. நிர்வாகம் ரூ. 300 வழங்கியது. சென்னை தொழிலாளர் சங்கம் ரூ.200 வழங்கியது.

# பிரிட்டிஷ் தளபதி மாண்ட் கோமரி மரணம்

லண்டன், மார்ச் 25— இரண்டாவது உலகப்போரின் போது உலகப்பிரசித்திபெற்ற தளபதியான பீல்ட் மார்ஷல் மாண்ட் கோமரி நேற்று மரணமடைந்தார். அவருக்கு வயது 88.

தெற்கு இங்கிலாந்தில் தமது கிராமப்புற வாசஸ் தலத்தில் தூக்கத்தில் உயிர் பிரிந்தது. பல வருஷ காலமாக அவர் இங்குதான் சுகவீனத்துடன் படுத்த படுக்கையாயிருந்தார்.

1887 நவம்பர் 17ந் தேதி பிறந்த மாண்ட் கோமரி, இரண்டாவது உலகப்போரின் போது பிரிட்டிஷ் படைகளின் வெற்றிக்குத் தலைமை தாங்கியவர். இவரது வெற்றிகளில் மிக முக்கியமானது. வட ஆப்பிரிக்காவில் அலாமீன் என்ற இடத்தில் ஏற்பட்டதாகும். இரண்டாவது உலகப் போரில் ஒரு திருப்புமுனையாக அது கருதப்பட்டது.

அதிகாரிகளுடனும் சாதாரண ராணுவ வீரர்களுடனும் சரிசமமாகப் பழகி அனைவரின் மதிப்புக்கும்அன்புக்கும் பாத்திரமானவர் அவர்.

# டிராக்டரில் பயணம் செய்த 9 பேர் மின்சாரம் தாக்கி சாவு

ஹைதராபாத், மார்ச் 25- டிராக்டர் டிரெய்லரில் பிரயாணம் செய்த 2 குழந்தைகள் உள்பட 9 பேர் மின்சாரம் தாக்கி பரிதாபமாக மாண்டனர்.

இந்தச் சம்பவம் ஆந்திர மாநிலம் அலகடப்பா கிராமத்தில் நேற்று நடந்தது.

மணல் ஏற்றி வருவதற்காக ஒரு டிராக்டர் டிரெய்லரில் 17 பேர் சென்று கொண்டிருந்தனர். டிரெய்லரில் பொருத்தப்பட்டிருந்த நீளமான கட்டப்பாறை உயர் அழுத்த மின்சாரக் கம்பி மீது பட்டதன் விளைவாக டிரெய்லரில் இருந்த 3 இளம் பெண்கள், இரு குழந்தைகள் உட்பட 9 பேர் மின்சாரம் தாக்கி மாண்டனர். மற்ற 8பேரும் தப்பினர்.

மணல் ஏற்றிச் செல்வதற்காக அந்த டிராக்டர் மிரால்குடா என்னுமிடத்தில் உள்ள ஆற்றுக்கு சென்று கொண்டிருந்ததாம்.

### தமிழ்நாட்டுக்கு ரூ. 2 கோடி வரிச் சலுகை

# மிளகாய், வெற்றிலைக்கு வரி குறைப்பு

## சுப்பிரமணியம் அறிவிப்பு

**புதுடெல்லி, மார்ச் 25—மிளகாய், வெற்றிலை போன்ற மக்கள் பயன்படுத்தும் அத்தியாவசியப் பொருள்களுக்கு வரிச் சலுகை அளிக்கப் பட்டிருக்கிறது.**

**தமிழ்நாட்டு பட்ஜெட் மீது நடந்த விவாதத்துக்கு பதிலளித்துப் பேசுகையில் நிதிமந்திரி சுப்பிரமணியம் மேற்கண்ட சலுகைகளை அறிவித்தார். பொருளாதார நிலை சீராக இருந்திருந்தால் மேலும் சலுகைகளை அளித்திருக்கமுடியும் என்றும் அவர் சொன்னார்.**

இந்தச் சலுகைகள் கணிசமானதென்று சுப்பிரமணியம் கூறினார். தமிழ் நாட்டின் நிதி நிலவரத்தையும், ரூ. 200 கோடிக்கு அதிகரிக்கப்பட்ட திட்ட முதலீட்டுக்கான நிதி வசதிகளைக் காணவேண்டிய கட்டாய நிலை இருப்பதையும் கருதி வரிச் சலுகைகள் பெருந்தொகையாகும் என்று சுப்பிரமணியம் கூறினார்.

### வரிச் சலுகைகள் விவரம்

1. வெளியூர் சர்வீஸ்மோட்டார் வண்டிகள் வரி குறைக்கப்படும். கால் வருஷத்துக்கு ஆசனம் ஒன்றுக்கு ரூ. 225 தீர்வை உத்தேசிக்கப்பட்டிருந்தது. இத்தீர்வை கால் ஆண்டுக்கு ஆசனம் ஒன்றுக்கு ரூ. 215 ஆக்கப்படுகிறது.

2. திராட்சை, கரும்பு, தோட்டங்கள் (தேயிலை, காப்பி, ரப்பர் போன்றவை) வெற்றிலை, மஞ்சள் உத்தேச தீர்வை ஏக்கருக்கு ரூ. 25 என்று அறிவிக்கப்பட்டிருந்தது. அது இப்போது ஏக்கருக்கு ரூ. 20 ஆகிறது.

3. புகையிலை, மிளகாய், பாசன வசதியுள்ள நிலங்களில் பயிரான பருத்திபாசன வசதியுள்ள நிலங்களில் பயிரான வேர்க்கடலை முதலிய ரொக்கப்பயிர்களுக்கு 'செஸ்' தீர்வை ஏக்கருக்கு ரூ. 15 என்று அறிவிக்கப்பட்டிருந் இப்போது அது குறைக்கப்பட்டு ஏக்கருக்கு ரூ. 12.5 ஆகிறது.

இந்த சலுகைகளின் மூலம் ஆண்டொன்றுக்கு ரூ. 2 கோடி வருமானத்தை இழக்க வேண்டியிருக்குமென்றும், இக் கணிசமான சலுகைகளை மக்கள் வரவேற்பார்கள் என்று நம்புவதாகவும் நிதி மந்திரி சுப்பிரமணியம் கூறினார்.

### அதிக சலுகை தர முடியவில்லை

நிதி மந்திரி மேலும் பேசுகையில், உறுப்பினர்கள் அதிக வரிச் சலுகைகளை கோரினரென்றும் தமிழ் நாட்டின் சிரமமான நிதி நிலவரத்தைக் கருதி அதிக சலுகை தர இயலவில்லை என்றும் கூறினர். தமிழ் நாட்டிலுள்ள பத்திரிகைகள், பல்வேறு சங்கங்கள், பொது மக்கள் தெரிவித்த கருத்துக்களை மிகவும் ஜாக்கிரதையாகப் பரிசீலித்து இந்தச் சலுகைகளைத் தருவதென முடிவு செய்ததாக தெரிவித்தார்.

### அற்புதம் நிகழாது

ஆரம்பத்தில் சுப்பிரமணியம், திமுக அரசு பதவியிலிருந்து நீக்கப்பட்ட போது தமிழ்நாட்டில் இருந்த நிலவரத்தையும், பின்பு நிர்வாகத்தை சீர்படுத்தவும், எல்லாத்துறைகளிலும் அபிவிருத்திகளைக் கொணரவும் எடுக்கபபட்ட நடவடிக்கைகளையெல்லாம் விவரமாக விளக்கினார்.

மத்திய அரசாங்கம் ஏதோ அற்புதங்களை நிகழ்த்தி ஒரே இரவில் தமிழ்நாட்டை ஒழுங்கான பாதையில் செல்லும்படி செய்துவிட முடியுமென்று எதிர்பார்க்கலாகாது என்று சுப்ரமண்யம் கூறினார். ராஷ்டிரபதி நிர்வாகத்தை மேற்கொண்டபோது எல்லாம் முழு கோளாறாக இருந்ததென்று சொல்வதுதான் மிதமாக சொல்வதாக இருக்[illegible]

### நிதி மந்திரி மட்டுமல்ல

நிர்வாகத்தில் படிந்துள்ள ஒட்டடைகளையெல்லாம் நீக்கவும், கல்வி ஸ்தாபனங்களிலும், பிற அபிவிருத்தித்துறை நிறுவனங்களிலும் எல்லாம் ஒழுங்காக இருக்கிறதென்ற தோற்றத்தை ஒருவாறு உண்டாக்கவும் நெடுநாள் பிடிக்கு மென்று சுப்ரமண்யம் சொன்னார்.

நிதிமந்திரி என்ற வகையில் மட்டுமின்றி தமிழ்நாட்டைச் சேர்ந்தவர் என்ற முறையிலும், மாநிலங்களிடையில் அதற்கிருந்த மதிப்பு மிக்க ஸ்தானம் மீண்டும் கிடைப்பதற்கானதையெல்லாம் செய்ய முயல்வதாக உறுதியளித்தார்.

### தி.மு.க.வால் சீர்குலைந்த தமிழ்நாடு

ஒன்பது ஆண்டு தி. மு. க. ஆட்சியில் தமிழ்நாடு எவ்விதம் சீர்கெட்டுவிட்டதென்பதற்கு சில உதாரணங்களை எடுத்துரைத்தார். முதல் மூன்று திட்ட காலத்தில் மொத்த திட்ட முதலீட்டில் மூன்றிலொரு பங்கு மின் விசை உற்பத்திக்கு ஒதுக்கப்பட்டதென்பதும் அப்போது மின் விசை உற்பத்தி உபரியாக இருந்ததென்பதும் நினைவிருப்பதாகக் கூறினார். ஆனால் தி மு க. பதவிக்கு வந்த பிறகு மின் விசை பற்றாக்குறை ஆரம்பித்ததென்றும் மின்வெட்டு நூறு சதவிகித நிலைக்குக் கூட வந்ததென்றும் கூறினார்.

தமிழ்நாட்டில் நீர் வசதிகளும் எப்படி வீணாகியதென்பதையும் விவரித்தார்.

திமுகவுடன் கலந்துரையாடிய அலுவலர்கள் இருந்தனரென்றும், அவர்களை அடையாளங் கண்டு கொள்ள வேண்டுமென்றும் அவர்களில் திருத்த முடியாதவரைக் கண்டு பிடித்து களையெடுக்கவேண்டியிருக்குமென்றும் சுப்ரமண்யம் கூறினார்.

நிதிமந்திரி பதிலுக்குப்பின் தமிழ்நாடு பட்ஜெட் நிறைவேறியது.

### 24,000 தி. மு. க. ஊழியர்க்கு வேலை

புதுடெல்லி, மார்ச் 25— தமிழ்நாடு மின்வாரியத்தில் 24 ஆயிரம் ஊழியர்கள் உபரியாக இருக்கிறார்கள் என்ற அதிர்ச்சி தரும் தகவலை நிதி மந்திரி சி. சுப்பிரமணியம் நேற்று மக்கள் சபையில் தெரிவித்தார்.

தமிழ்நாடு பட்ஜெட் மீது நடைபெற்ற விவாதத்துக்குப் பதிலளித்துப் பேசுகையில் மேற்கண்டவாறு அவர் கூறினார்.

மேலும் அவர் தெரிவித்ததாவது:—

தமிழ்நாடு மின்சார வாரியத்தில் சுமார் ஒரு லட்சம் ஊழியர்கள் இருக்கிறார்கள். இவர்களில் குறைந்தது 24 ஆயிரம் பேர்கள் உபரி என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

தி.மு.க. ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்பட்டதும் கவர்னரின் ஆலோசகர்கள் மின்சார வாரிய நிர்வாகம் குறித்து பரிசீலித்தார்கள். அப்போதுதான் இந்த உபரி ஊழியர்கள் கண்டுபிடிக்கப்பட்டது.

தி.மு.க.காரர்களை மின் வாரியத்தில் நுழைக்க வேண்டும் என்ற நோக்கத்துக்காகவே இந்த நியமனங்கள் செய்யப்பட்டிருக்கின்றன என்பதைத்தான் இது காட்டுகிறது.

இதில் சம்பந்தப்பட்ட ஒரு அதிர்ச்சி தரக்கூடிய செய்தி என்னவென்றால் தி.மு.க. ஆண்ட 9 ஆண்டுகாலத்தில் மின்சார வாரியத்தில் 8 சேர்மென்கள் மாறிமாறி நியமனம் செய்யப்பட்டிருக்கிறார்கள்.

ஒரு குறிப்பிட்ட காலம் வரையிலாவது எந்த தலைவரும் நீடித்திருக்காத நிலையில் மின்சார வாரிய நிர்வாகம் எப்படி சீராக நடைபெற்றிருக்க முடியும் என்று சுப்பிரமணியம் கேட்டார்.

### தேசிய ஊதியக் கொள்கை: சி. எஸ். தகவல்

புதுடெல்லி. மார்ச் 25— இபொழுது விலைவாசிகள் ஓரளவுக்கு ஸ்திரமடைந்து இருப்பதால், தேசிய ஊதியக் கொள்கையை உருவாக்குவதில் கவனம் செலுத்தமுடியும் என்று ராஜ்யசபையில் நிதி மந்திரி சி. சுப்பிரமணியம் கூறினார்.

பல்வேறு துறைகளில் ஊதிய அமைப்பு சீர்மையாக இல்லை என்பதை ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் அவர் ஒப்புக் கொண்டார். இந்த விஷயம் ஆராயப்பட்டது. ஆனால் பணவீக்க நிலைமையாலும் ஊழியர்களுக்கு மேலும் கிராக்கிப்படிகள் அளிக்கப்பட்டதாலும் தேசிய ஊதியக் கொள்கையை உருவாக்க ஏற்ற சமயமாக இல்லை. இப்பொழுது விலைவாசிகள் ஓரளவு ஸ்திரமடைந்திருப்பதால், தேசிய ஊதியக் கொள்கையை உருவாக்குவதில் நாம் சிறிது கவனம் செலுத்தலாம் என்றார்.

### ரூ. 2.10 லட்சம் கிராம்பு பறிமுதல்

ராமநாதபுரம், மார்ச் 25— ராமநாதபுரம் அருகே மேற்கரை கடற்கரைப் பகுதியில் ஒரு இடத்தில் சுங்க அதிகாரிகள் ரூ. 2.10 லட்சம் பெறுமான கிராம்புகளை கைப்பற்றினர்.

அந்த சரக்கு ஸ்ரீலங்காவிலிருந்து கள்ளத்தனமாக கடத்திவரப்பட்டவை என்று கருதப்படுகிறது.

### தனியார் தர்மகர்த்தாக்களை

# பெரிய கோயில்களில் இருந்து விரட்ட சட்டம் வருகிறது

**சென்னை, மார்ச் 25—பெரியகோவில்களில் இருக்கும் தனியார்களை தர்மகர்த்தாப் பதவியில் இருந்து நீக்க அறநிலைய சட்டத்தில் திருத்தம் கொண்டுவரப்படும் என்று தெரிகிறது.**

பெரிய கோயில்களில் அறங்காவலர்களாக உள்ள தனியார்களை அறங்காவலர் குழுவிலிருந்து நீக்குவதற்கு வசதியாக அறநிலையச் சட்டத்திலும் திருத்தம் செய்யமுடிவு செய்யப்பட்டுள்ளது. இது ஜனாதிபதியின் சட்டமாக கொண்டுவரப்படும் என்று நம்பத்தகுந்த வட்டாரங்களிலிருந்து அறியப்படுகிறது. சட்டத்திருத்தம பற்றிய அறிவிப்பு அடுத்த ஒருவாரத்தில் வெளிவரக்கூடும்.

### 50 கூட்டுறவு சங்க நிலை?

கூட்டுறவுகளைப் பொறுத்தவரையில் முதல் கட்டமாக, சுமார் ஐம்பது கூட்டுறவு அமைப்புகளின் நிர்வாகசபைகள் கலைக்கப்பட்டு, அவை விசேஷ அதிகாரியின் (கூட்டுறவு இணைப்பதிவாளர்மற்றும் துணைப்பதிவாளரின் நேரடி நிர்வாகத்தின் கீழ் வரும். கூட்டுறவுத் துறையில் 12 மாநில சங்கங்களும் மாவட்ட மட்டத்தில் மத்திய வங்கிகள் பண்டகசாலைகள் என்கிற வகையில் நாற்பதுக்கும் சற்றுக் கூடுதலான நிறுவனங்கள் உள்ளன.

### சீர்கேடு

பண முறைகேடு, நிர்வாக சீர்கேடு, பற்றிய புகார்கள் இப்படிப்பட்ட கூட்டுறவுகள் பற்றி வருமானால் அவற்றைக் கலைக்க கூட்டுறவு சட்ட விதிகள்கீழ் அதிகாரம் அந்தத் துறைக்கு உள்ளது.

### ஜனாதிபதி சட்டம்

முறைகேடாக நிர்வாக சீர்கேடுகள் பற்றி புகார்கள் வந்

(7ம் பத்தி பார்க்க)

# ஜாக்பாட்டில் ரூ. 41,000 பரிசு பெற்ற பெண் மயக்கம்

சென்னை, மார்ச் 25—ஜாக்பாட் பரிசில் ரூ. 41 ஆயிரம் கிடைத்த மகிழ்ச்சியில் அதிர்ச்சியடைந்த ஒரு பெண்ணுக்கு மயக்கம் ஏற்பட்டது. ராயபுரத்தைச் சேர்ந்தவர் கே. லட்சுமிதேவி. வயது 40. கடந்த ஞாயிற்றுக்கிழமை அவர் ரூ. 10 கட்டி ரேசில் ஜாக்பாட் டிக்கெட் ஒன்றை வாங்கினார்.

குலுக்கிப்போட்டு எடுத்த நெம்பர் எங்கே ஜெயிக்கப் போகிறது என்றுதான் அவர் இருந்தார்.

ஆனால் அடுத்த நாள் பத்திரிகையைப்பார்த்ததும் தனது டிக்கெட்டுக்குப் பரிசு விழுந்ததை அறிந்ததும் அவர் மயங்கி விழுந்தார். உடனே அக்கம்பக்கத்தில் உள்ளவர்கள் தண்ணீர் தெளித்து மயக்கம் தெளிய வைத்தனர்.

21-3-76ல் நடந்த ரேசில் 4 பேருக்கு தலா ரூ. 41 ஆயிரத்து 861 பரிசு விழுந்தது தெரிந்ததே. அந்த நால்வரில் ஒருவர் லட்சுமிதேவி.

# தமிழகத்திற்குத் தண்ணீர் உதவி: மக்கள்சபையில் கல்யாணசுந்தரம் பேச்சு

**புதுடெல்லி, மார்ச் 25— தமிழகத்திற்கு அண்டை மாநிலங்கள் தண்ணீர் தரவேண்டும் என்று கம்யூனிஸ்டு தலைவரான கல்யாண சுந்தரம் வேண்டுகோள் விடுத்தார்.**

நேற்று புதுடெல்லியில் மக்கள் சபையில் தமிழ்நாடு பட்ஜெட் மீதான விவாதத்தில் கலந்துகொண்டு அவர் பேசினர்.

அவர் பேசியதாவது:

தமிழகத்தில் தண்ணீர் வசதி மிக குறைவானது. திமுகவின் மொழிவெறிக் கொள்கையால் தமிழகம் தனிமைபடுத்தப்பட்டது.

திமுக அரசின் விரோதபோக்கிற்கு தமிழக மக்களை குறை கூறக் கூடாது.

### 7 மாவட்டம்

தமிழகத்தில் 7 மாவட்டங்கள் வறட்சியால் பீடிக்கப்பட்டிருக்கின்றன. 52 சதவிகித மக்கள் மிகவும் வறுமையில் இருக்கிறார்கள்.

பூமிக்கடியில் இருக்கும் தண்ணீரை வெளிக்கொணர மத்திய அரசு முயற்சி செய்ய வேண்டும்.

கல்பாக்கம் அணுமின் நிலைய திட்டம் விரைவில் முடிக்கப்படவேண்டும். விரிவாக்கப்படவேண்டும். பற்றாக்குறைமின்சாரத்தை அண்டை மாநிலங்கள் வழங்க வேண்டும்.

பட்ஜெட்டில் விதிக்கப்பட்டிருக்கும் வரிகள் சாமான்ய மக்களை பெரிதும் பாதிக்கும்.

புதிய வரிகள் பற்றி மத்திய நிதி அமைச்சர் மறு பரிசீலனை செய்யவேண்டும்.

விவசாயத்துறைக்கு படிப்படியாக வருமான வரி விதிக்கும் திட்டத்தை அமுல் படுத்தபடவேண்டும்.

### பஸ் கட்டண உயர்வு

பஸ் கட்டண உயர்வுக்கு கல்யாணசுந்தரம் எதிர்ப்பு தெரிவித்தார்.

போக்குவரத்து துறையை மாற்றி அமைக்க வேண்டும், இதனால் போக்குவரத்து துறையின் வருமானம் உயரும் என்றார் கல்யாணசுந்தரம்.

கரும்பு சாகுபடியாளர்களுக்கு நிவாரணம் கொடுக்கப்பட வேண்டும்.

கூட்டுறவு, தனியார் துறைகளில் குவிந்திருக்கும் கைத்தறி துணிகளின் தேக்கத்தை நீக்க மத்திய அரசு உதவ வேண்டும்.

இவ்வாறு கல்யாணசுந்தரம் பேசினர்.

### தமிழகத்தில் மின்சாரம் திருட்டு: மத்திய அரசு கவனிக்கும்

புதுடெல்லி, மார்ச் 25— தமிழ்நாட்டில் மின்சார திருட்டு உள்ளதாக கூறப்படும் புகார் பற்றி அரசு கவனிக்கும் என்று உதவி மின்சார மந்திரி சித்தேஷ்வர் பிரசாத் நேற்று மக்கள் சபையில் தெரிவித்தார்.

எம். காத்தமுத்து கேட்ட கேள்விக்கு பதிலளிக்கையிலே மந்திரி இவ்வாறு சொன்னார்.

1972-73, 1973-74-ம் வருஷ தணிக்கைப்படி அரசிடமிருந்து மான்ய உதவி பெற்று அரசு கடனுக்கு செலுத்த வேண்டிய வட்டி உள்பட எல்லா செலவுகளையும், நிதி ஒதுக்கீடுகளையும் போர்டு சமாளித்துள்ளது என்றும், 1974-75, 1975-76 கணக்குகள் இன்னும் இறுதியாக்கப் படவில்லை என்றும், போர்டு தனது சொந்த நிதியிலிருந்து எல்லாசெலவுகளையும் சமாளிப்பதற்கில்லை என்றும் மந்திரி கூறினர்.

### புதுவையில் திட்ட கண்காட்சி

புதுச்சேரி, மார்ச் 25— புதுவை உப்பளம் காவலர் திடலில் இருவார திட்ட கண்காட்சியை மாநில கவர்னர் சேத்திலால் துவக்கி வைத்தார். மூர்த்தி சிறியதானாலும் கீர்த்தி பெரியது என்பதற்கு எடுத்துக் காட்டாக புதுவை மாநிலம் சிறியதாக இருந்தபோதிலும் நாட்டிற்கே வழிகாட்டியாக விளங்குகிறது என்று அவர் கூறினர்.

பிரதம செயலர் சந்திரமவுளி தலைமை வகித்தார். 19 அரசியல் தியாகிகளுக்கு சேத்திலால் தாமிரபத்திரம் வழங்கினர்.

இறுதியில் பொதுஜனத் தொடர்பு அதிகாரி ஜார்ஜ் நன்றி கூறினர்.

### செங்கல்பட்டு வரை மின்சார ரெயில்

செங்கல்பட்டு, மார்ச் 25— சென்னையிலிருந்து செங்கல்பட்டு வரை மின்சார ரெயில் விடவேண்டும் என்று தென்னிந்திய ரெயில்வேமானேஜர் எம். ஆர். ரெட்டியிடம் கோரப்பட்டது.

செங்கல்பட்டு ரெயில் நிலையத்தை அவர் பார்வையிட வந்தபோது ரெயில் நிலைய ஆலோசனைக் குழுவினர் இந்தக் கோரிக்கையை விடுத்தனர்.

தற்போது சென்னையிலிருந்து கூடுவாஞ்சேரி வரை மின்சார ரெயில்கள் செல்கின்றன. பரீட்சார்த்தமாக ஏப்ரல் மாதத்திலிருந்து செங்கல்பட்டு வரை சில மின்சார ரெயில்களையாவது விட வேண்டும், சென்னை-காஞ்சிபுரம் பாசஞ்சர் ரெயிலில் மேலும் சில பெட்டிகளை இணைக்கவேண்டும் என்றும் ஆலோசனைக் குழுவினர் கோரினர்.

### குடிநீர் திட்டங்கள்: அரசு புது உத்தரவு

மதுரை, மார்ச் 25—குடிநீர் சப்ளை திட்டத்தை நிறைவேற்றும் பொறுப்பை வறட்சி நிவாரண திட்டத்தின் ஒரு பகுதியாக நிறைவேற்றும் வகையில் அவற்றை தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத் திடம் ஒப்படைக்குமாறு மாநில அரசு மாவட்ட அதிகாரிகளுக்கு உத்தரவிட்டுள்ளது.

முன்பு இருந்த திமுக ஆட்சி காலத்தில் இந்த திட்டங்களை பஞ்சாயத்து யூனியன்களோ அல்லது குடிநீர் வடிகால் வாரியமோ நிறைவேற்றி வந்தன. பஞ்சாயத்து யூனியன்கள் இந்த திட்ட வேலைகளை நிறைவேற்ற வேண்டியதில்லை என்று தற்போதைய உத்தரவு கூறுகிறது.

### 2-ம் பத்தி தொடர்ச்சி

துள்ள கூட்டுறவு அமைப்புக்களின் நிர்வாக சபைகளைக் கலைத்து (தனியார், அதிகாரப் பற்றற்றவர்களை நிர்வாக சபைகளிலிருந்து விலக்கி) அவற்றை கூட்டுறவுத் துறை அதிகாரிகளின் நேரடி நிர்வாகத்தின் கீழ் கொண்டு வர கூட்டுறவுச் சட்டத்திற்கு திருத்தம் செய்ய முடிவு செய்யப்பட்டுள்ளது. தமிழ் நாட்டில் ராஷ்டிரபதி ஆட்சி நடப்பதால், இதற்கென சட்டத் திருத்தம் செய்ய ஜனாதிபதிக்கு நாடாளுமன்றம் வழங்கி உள்ள அதிகாரத்தின் அடிப்படையில் ஜனாதிபதியின் சட்டமாக இது கொண்டு வரப்படும்.

# பரோடா வெடிகுண்டு வழக்கு: மேலும் 3 பேர் கைது

**பரோடா, மார்ச் 25—பரோடா வெடிகுண்டு வழக்கில் மேலும் 3 பேர் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.**

அவர்களை 10 நாட்கள் காவலில் வைக்கும்படி மாஜிஸ்டிரேட் உத்தரவிட்டார்.

இம்மூவரில் ஒருவர், வெடி மருந்து சோதித்துப் பார்க்கப்பட்ட குவாரியின் உரிமையாளர் ஜதின்பாய் படேல். மற்றொருவர் மோதிராம் கொண்டியா, அரசியல் கட்சி ஊழியர். மூன்றுமவர் மிஸா காவல் கைதியான கோவிந்தபாய் சோலங்கி.

இவர்களில் குவாரி உரிமையாளர் திங்கட் கிழமையன்று இங்கு போலீசாரால் கைது செய்யப்பட்டார்.

### அரசியல் கட்சி

வெடி மருந்துக் குச்சிகளில் ஒரு பகுதியை பாட்னாவுக்கு அனுப்பி வைப்பதில் உடந்தையாக இருந்ததாக, அரசியல் கட்சி ஊழியர் கொண்டியா நேற்றுக் கைது செய்யப்பட்டார். அதில் தொடர்பு கொண்டிருந்ததாக "மிஸா" காவல் கைதியான சோலங்கி காவலில் வைக்கப் பட்டுள்ளார்.

### 12 பேர் கைது

அவர்கள் மூவரையும் சேர்த்து இதுவரை பரோடா வெடி மருந்து வழக்கில் மொத்தம் சுமார் 12 பேர் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். அவர்களில் 2 பேர் பத்திரிகையாளர்கள். ஒருவர் ஜனதா முன்னணி கார்ப்பொரேஷன் மெம்பர். இவர் ஒரு பஸ் கம்பெனி உரிமையாளர். இவருடைய கிட்டங்கியிலிருந்து 800 வெடி மருந்து குச்சிகள் கைப்பற்றப்பட்டன வாரணாசியில் இவைகளைப் பெறுவதாக இருந்தவர் இங்கு கொண்டுவரப்பட்டிருக்கிறார்.

கைது செய்யப்பட்டவர்களில் சிலர் ஜாமீனில் விடுதலை செய்யப் பட்டிருக்கிறார்கள், மற்றவர்கள் போலீஸ் காவலில் வைக்கப்பட்டிருக்கிறார்கள்.

ஜாமீனில் விடுதலை செய்யுமாறு குவாரி உரிமையாளர் அளித்த மனுவை மாஜிஸ்டிரேட் நிராகரித்தார்.

# திரை உலகம்

## நீதிக்குத் தலைவணங்கு

### விமர்சனம்

அறியாமல் செய்த குற்றம் என்றாலும் அதற்குரிய தண்டனையை அனுபவித்தே தீரவேண்டும் என்று துடிக்கும் விஜயனை, தாய்ப்பாசம் கட்டிப் போடுகிறது. என்றாலும் தன்னால் பாதிக்கப்பட்ட ஒருபெண்ணின் வாழ்வில் ஒளி ஏற்றுகிறான்; கண்ணொளி இழந்த ஒருவனுக்குப்பார்வை வழங்குகிறான். தன் உள்ளத்தைப் புரிந்து கொள்ளாத தந்தையை 'அவன்தான் என் பிள்ளை' என்றுபெருமையோடு சொல்ல வைக்கிறான். இத்தனைக்குப் பிறகும்—தான் தவறு செய்ய தண்டனையை இன்னொருவன் அனுபவிக்கும்படி ஆகிவிட்டதே என்று வருந்தி, கடைசியில் தன்னை நீதியின் கையில் ஒப்படைக்கிறான். இதுதான் நீதிக்குத் தலைவணங்கு கதை!

**எம். ஜி. ஆர்.**

காரைக் கொண்டுவந்து வீட்டின்முன் நிறுத்திவிட்டு, டிரைவரை கண்டித்தபடி உள்ளே எம். ஜி. ஆர் செல்கிறார். தாயின் முன்னிலையில் சத்தம் போடுவதும், தந்தை வந்ததும் தாயின் பின் மறைந்தபடி முணுமுணுப்பதும், கோபமாக மாடிப்படிகளில் ஏறிச்செல்வதும் நயமான நடிப்பு; குற்றம்புரிந்ததை அறிந்ததும் காவல் நிலையம் செல்லத் துடிப்பது, தாயின் கண்ணீர், கதறலில் உறுதி கரைந்து நிற்பது, தந்தையிடம் வாதாடிவிட்டு ரோஷமாக வெளியேறுவது நெஞ்சில் நிற்கும் கட்டங்கள்!

பணக்கார வீட்டில் பட்லராகச் சேர்ந்து, அந்த வீட்டுப் பெண்ணுக்கு, "இன்னும்.... கொஞ்சம்" என்று உணவு ஊட்டும் காட்சியில் அருமையாக நடித்திருக்கிறார். பைத்தியக்காரன்வேடத்தில் தாயைக் காணவரும் காட்சியில் உணர்ச்சியைக் கொட்டி நடித்து உள்ளத்தைத் தொடுகிறார். 'வாடா...மேனேஜர் பயலே எவ்வளவுசுருட்டினே?' என்று அநாயாசமாகக் கேட்கும் இடத்தில் நல்ல கலகலப்பு! சண்டைக் காட்சியில் கதவைத் திறந்து கொண்டு ராமதாஸை வெளியேபோகச் சொல்வதும், அவர் வரும்போது தாக்குவதும், கடைசியில் நம்பியாருடன் மோதும் கட்டங்களும் — நல்ல சுறுசுறுப்பு!

நம்பியாரை மிரட்டி, விரட்டும் காட்சிகளில் லதா நன்கு நடித்துள்ளார். தேங்காய் சீனிவாசன அர்ச்சனை செய்வதும், அவருக்கு எம். ஜி. ஆர். (அடி, உதை) அர்ச்சனை செய்யும் காட்சியும் சிரிப்பூட்டும்-வி. கே. ராமசாமி பேச்சும், நடிப்பும் நகைச்சுவை விருந்து!

புஷ்பலதா, புதுமுகம் பானியா, ரோஜாரமணி, நம்பியார், எஸ். வரலட்சுமி, வி. எஸ். ராகவன், எஸ். வ. ராமதாஸ், வி. கோபால கிருஷ்ணன் ஆகியோர் திறம்பட நடித்துள்ளனர்.

**வசனம்**

ஆர். கே. சண்முகத்தின் உரையாடலில் கருத்து வளமும், நகைச்சுவையும் நிறைவாக உள்ளன.

'இந்த பச்சைக்கிளிக்கொரு...' என்ற புலமைப்பித்தனின் பாடல் வரலட்சுமி ஜேசுதாஸ் குரல்களில் படத்தில் இருமுறை இடம்பெற்று, பலமுறை நம்மை முணுமுணுக்கவைக்கிறது.

நா. காமராசனின்—'எத்தனை மனிதர்கள் உலகத்திலே', 'கனவுகளே'—இரு பாடல்களும் கருத்து, கற்பனையால் கவர்ந்து, இசையால் மனதில் இடம்பெறுகின்றன.

படத்தின் சிறப்பு அம்சங்களாக மோட்டார் சைக்கிள் பந்தயத்தையும், உச்சகட்ட காட்சியையும் குறிப்பிட வேண்டும். மோட்டார் சைக்கிள்கள் படிக்கட்டுகளில் பாய்ந்து முன்னேறுவதும், கீழே இறங்குவதும், வில்லிலிருந்து புறப்பட்ட அம்பு போல் பாய்ந்துதாண்டுவதும் அருமையாகப் படமாக்கப்பட்டுள்ளன.

**டைரக்ஷன்**

பொழுதுபோக்கு அம்சங்களுடன் விறுவிறுப்பு குறையாமல் ப. நீலகண்டன் இயக்கியுள்ளார். வெளிப்புறப் படப்பிடிப்பு, உச்சகட்ட காட்சிகள் நன்கு படமாக்கப்பட்டுள்ளன.

—நாகை தருமன்

## புதுமுகத்தை திகைக்க வைத்த சிவகுமார்

புதுமுகம் ஜெயலட்சுமிக்கு தனக்கு வரவேண்டிய கணவன் புத்திசாலியாக இருக்க வேண்டும் என்பது ஆசை. ஆகவே தன்னைப் பெண் பார்க்க வரும் மாப்பிள்ளைகளுக்கு ஒரு போட்டி வைக்க முடிவு செய்தார்.

அந்த போட்டியை ஏற்று மாப்பிள்ளை வீட்டார் பெண் பார்க்க வந்தார்கள்.

வழக்கமாக பெண் பார்க்க வரும் மாப்பிள்ளைக்கு பெண் காபி கொண்டு வருவாள். ஆனால் புதுமுகம் ஜெயலட்சுமியோ விஷக்கோப்பையைக் கொண்டு வந்தாள்.

ஒரு தட்டில் மூன்று கோப்பைகள் நிறைய ஒருவகை பானத்தை கொண்டு வந்த ஜெயலட்சுமி, "இந்தக் கோப்பைகளில் ஒன்றில் மட்டும் விஷம் இல்லை. புத்திசாலியாக இருந்தால் அதை மட்டும் எடுத்து அருந்துங்கள் பார்ப்போம்" என்றார்.

மாப்பிள்ளைகள் தூக்கு மேடையில் நிற்பது போன்று பயந்து அலறி ஓட ஆரம்பித்தார்கள்.

இதையெல்லாம் பக்கத்தில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த சிவகுமார் விரைந்துவந்து, மூன்று கோப்பை பானத்தையும் ஒன்றாக கலக்கி லபக்கென்று குடித்துவிட்டார்.

புதுமுகம்ஜெயலட்சுமியோ திகைப்பினால் வாயைப் பிளந்தார்.

இந்த சுவையான காட்சி எதற்கும் துணிந்தவன் படத்திற்காக கர்ணனின் ஒளிப்பதிவு டைரக்ஷனில் படமாக்கப்பட்டது.

சுந்தரராஜன், அசோகன், தேங்காய்சீனிவாசன், வி.எஸ் ராகவன், பண்டரிபாய் ஆகியோர் நடிக்கும் இப்படம் விரைவில் திரைக்குவர இருக்கிறது.

எம். கே. ஆர். பிக்சர்ஸ் சார்பில் எம். குப்புராஜ், எம். ராஜா தயாரித்து வருகின்றனர்.

## இன்றைய சினிமா

**சென்னை**

காமதேனு: தாய் வீட்டு சீதனம்
மேற்கு மாம்பலம் நேஷனல்: பாட்டும் பரதமும்
ராம்: ஒரு கொடியில் இருமலர்கள்
சராஸ்: சந்திரோதயம்
நியூ எல்பின்ஸ்டோன்: அம்மா

**குரோம்பேட்டை**

வெற்றி: மன்மத லீலை

**பல்லாவரம்**

லட்சுமி: பாக்தாத் திருடன்

**தாம்பரம்**

நேஷனல்: திருவருள்

**கொளத்தூர்**

ஸ்ரீ குமரன்: அன்பே ஆருயிரே

**திருக்கழுக்குன்றம்**

கன்னியப்பா: ஏழைக்கும் காலம் வரும்
புவனேஸ்வரி: ரோஷக்காரி

**வில்லிவாக்கம்**

ராயல் — தசாவதாரம்

'என்ன தவம் செய்தேன' படத்தில் குசலகுமாரி, புதுமுகம் பவானி.

## சந்தனக் காட்டில் மணம் பெறும் 'கடமை நெஞ்சம்'

தமிழ்த்திரைப்படக் கலைஞர்கள் பத்திரிகையாளர்களோடும், ரசிகர்களோடும் பழகுவதில் ஒவ்வொருவரும் தங்களுக்கென்று ஒரு தனி பாணியை வைத்துள்ளனர்.

கரம்குவித்து வணக்கம் தெரிவித்து, வாயும், மனமும் நிறைய, "வாங்க....நலமா...." என்பது ஒருவகை!

வஞ்சனையில்லாமல் எல்லா பற்களையும் காட்டி, 'கலகல'வென்று சிரித்து, வாஞ்சையோடு வரவேற்பது ஒருவகை! சிரிப்பதிலும் சிக்கனம், பேசுவதிலும் ஒரு அளவு என்று இருப்பவர்கள், கண்டாலும் காணாததுபோல்- பார்த்தாலும் பார்க்காததுபோல்போய்விடுபவர்கள் இப்படிப் பலவகையானவர்கள்! பார்க்காததுபோல் போகிற ஒரு சிலரது படங்களை, ரசிகர்களும் அதே பாணியில் பார்க்காமலே திரையரங்கிலிருந்து வெகுவிரைவில் வழியனுப்பி வைத்து விடுகின்றனர்.

இன்று பொதுமக்கள், ரசிகர்கள் மத்தியில் பல கலைஞர்கள் செல்வாக்கோடு விளங்குவதற்கும், படங்கள் வெற்றியடைவதற்கும், அவர்கள் பழகும்தன்மையும் ஒரு காரணம்! மக்களில் நாமும் ஒருவர் என்ற எண்ணத்தோடுதன்னைத்தனிமைப் படுத்திக் கொள்ளாமல் அவர்களோடு ஒன்றிப்பழகுகின்றவர்கள் எங்கும் வரவேற்கப் படுவார்கள்.

மைசூர் அருகில் உள்ள சந்தனக் காட்டில் 'கடமை நெஞ்சம்' படப்பிடிப்பு நடந்த போது இதனைக் கண்ணெதிரில் கண்டோம்.

'ஹாய்' என்ற குரல் கேட்டதுமே அது ஜெய்சங்கர்தான் என்பது எல்லோருக்கும் சொல்லாமலே புரிந்துவிடும்!

ஜெய்சங்கர்தான் அப்படி எங்களை வரவேற்றார். மனோகரும், அவரும் துப்பாக்கிச் சண்டையிடும் காட்சிகள் படமாக்கப்பட்டன ஒரு 'ஷாட்' முடிந்தது என்றால் உடனே ஓடிவந்து விடுவார் பேசிக் கொண்டிருப்பதற்கு! 'ரெடி' என்ற குரல் கேட்டால் மீண்டும் ஓடிவிடுவார்.

படப்பிடிப்பு நடந்த இடம் மைசூரிலிருந்து 50 மைல் தொலைவிலுள்ள நடுக்காடு! அந்தக் காட்டில் கூட ஆயிரக்கணக்கானவர்கள் படப்பிடிப்பைக் காண வந்துவிட்டனர். மரங்களின் மீது ஏறி அமர்ந்தபடி அவர்கள் வேடிக்கை பார்த்தனர். ஆண்கள்தான் சைக்கிள், மோட்டார் சைக்கிள்களில் வந்தார்களென்றால், பெண்கள் கூட பெருங்கூட்டமாக வந்துசேர்ந்தது ஆச்சரியமாக இருந்தது. அவர்களில பலர் பஸ்களிலும், சிலர்கால் நடையாகவும் வந்ததாகக்கூறினர்.

அவர்களிடமெல்லாம் சென்று ஜெய்சங்கர் நலம் வினவினார். நேரம் கிடைக்கும் போதெல்லாம் ரசிகர்களிடம் அளவளாவிக்கொண்டிருந்தார். நெடுந்தூரத்திலிருந்து வந்த பலர், தங்கள் சிரமங்களையெல்லாம் மறந்துவிட்டுஇதனால் மிகவும் மகிழ்ச்சியடைந்தனர் என்பது தெரிந்தது.

காட்டின் ஒரு பகுதியிலிருந்து இன்னொரு பகுதிக்குச் செல்ல வேண்டும். துணை நடிகர்களையும், பொருள்களையும் ஏற்றிக் கொண்டு, ஜெய்சங்கரே ஜீப்பை ஓட்டி எல்லோரையும் அங்கே கொண்டு போய்ச் சேர்த்தார். தயாரிப்பாளர் ஈஸ்வரும், டைரக்டர் துரையும், ஜெய்சங்கரிடம் அதிக மதிப்பும், மரியாதையும் வைத்திருப்பதற்கான அடிப்படை புரிந்தது.

கடத்தல்காரர்கள் சந்தனக் கட்டைகளை லாரியில் ஏற்றுவதையும், ஜெய்சங்கர் பிடிப்பதையும் படமாக்கினர். திடீரென்று—

அருகில் ஏதோவொரு சப்தம் கேட்டது. இருப்பது காடு என்பதால எல்லோரும திரும்பித் திரும்பி சுற்றிலும் பார்த்தோம், ஒன்றும் தெரியவில்லை.

"இது....எங்கிருந்து வருகிறது தெரியுமா?" ஜெய்சங்கர் கேட்டார்.

தெரியாது என்று நாங்கள் சொல்லவில்லை—எங்கள் முகங்கள் தெரிவித்தன.

"இந்த சத்தத்தை உண்டாக்குபவர் மனோகர். யானை வரும் பின்னே—மணி ஓசை வரும் முன்னே என்பார்கள். மனோகர் இருக்குமிடம் எங்கே ஓசை வரும் அங்கே என்பது புதுமொழி', என்று கூறியபடி அவர் ஹுக்கா பிடித்துக் கொண்டிருப்பதை காண்பித்தார்.

தமிழ் நடிகர்களிலேயே ஹுக்கா பிடிக்கும் நடிகர் மனோகர்தான்.

அதற்கு தினந்தோறும் தண்ணீர் மாற்ற வேண்டும் என்று ஹுக்காவின் மகத்துவம், அதன் காரம், மணம்-குணம் குறித்து மனோகர் வவரிக்க ஆரம்பித்தார்.

மதியம் வாங்கியாத் பரிமாறப்பட்டது எல்லோருக்கும் சுதால உணவு. குடிதண்ணீருக்கு பல மைல்கள் சென்று வரவேண்டும் என்று குறிப்பிட்டார்கள். ராமதாஸ் ஆகாரம்தான் வம்பில்லாதது-வயிற்றுத்தொல்லை தராதது. காரட், சாத்துக்குடிதான் அவரது மதிய உணவு!

மார்ச் மாதம் 7 ஆம் தேதி சகுந்தலா மனோகர், ராமதாஸ ஆகியோருடன் ஜெய்சங்கர் சம்பந்தப்பட்ட காட்சிகள் படமாக்கப்பட்டன,

அன்று மதியம் நடுக்காட்டில் சகுந்தலா பிறந்தநாள் விழாவைக் கொண்டாடினர். ஜெய்சங்கர் வாழ்த்தினர். பத்திரிகையாளர் சார்பில் மாலை வழங்கபபட்டது.

மாலையல நடந்த படப்பிடிப்பில் ஜெய்சங்கர், சகுந்தல'வுடன் விஜயசிம்மன், படத்தின் பொது மக்கள் தொடர்பாளர் செல்லப்பன் ஆகியோர் நடித்த காட்சிகள் படமாக்கப்பட்டன.

டைரக்டர் துரை, படத்தின் பெரும்பகுதி எடுக்கப்பட்டு விட்டதாகவும், உச்சக்கட்ட காட்சிதான் பாக்கி என்றும் கூறினர்; காட்டிலாக்கா அதிகாரிகள் தரும் ஒத்துழைப்பு குறித்து அவர் தெரிவித்தார். யானைக் கூட்டத்தின் மத்தியின் பலவித கஷ்டங்களுக்கிடையில், பல ஆபத்துக்களுக்கிடையில் பல காட்சிகளைப் படமாக்கி இருப்பதாகவும் கூறினர். இந்தப் படத்தின் கதாநாயகி ஸ்ரீவித்யா,

வெளிப்புறப் படப் பிடிப்பில் நடிகர்கள், தயாரிப்பாளர், டைரக்டர், மற்ற கலைஞர்கள் எவ்வாறு ஒரே குடும்பம்போல் ஒருங்கிணைந்து பாடுபட வேண்டும் என்பதற்கு உதாரணமாக அவர்கள் திகழ்ந்தார்கள். தயாரிப்பாளர் ஈஸ்வர், டைரக்டர் துரை மீது வைத்துள்ள நம்பிக்கை, அதனை ஏற்று செயல்படும் துரையின் 'கடமை நெஞ்சம்' ஒத்துழைப்பு தரும் கலைஞர்கள் நல்லெண்ணம் பாராட்டுதலுக்குரியது.

'முயற்சி திருவினையாக்கும்' என்றால் இவர்களுடைய நன் முயற்சியும், உழைப்பும் வெற்றியைத்தராமலா போய் விடும்?

காட்டில் வெளிப்புறப் படப்பிடிப்பைக் காண ஏற்பாடு செய்த மக்கள் தொடர்பாளர் செல்லப்பா, நல்ல நண்பரும், நடிகருமான விஜயசிம்மன் ஆகியோருக்கு பத்திரிகையாளர்கள் நன்றி கூறி விடைபெற்றோம்.

'தீ'

''ஓடிப்போன கணவன்'' படத்தில், சுனந்தினி.

## சுந்தர்ராஜன் மீது கொலைக் குற்றம்

பிரமிளா தன் ஒரே மகன் மீது அளவு கடந்த பாசத்தை வைத்திருந்தார். அதேபோல் அந்தோணியாரின் தந்தையும் பிரமிளாவின் மகனிடம் அளவுகடந்த பாசத்துடன் பழகுகிறார். சிறுவனும் அவரிடம் உயிருக்குயிராக பழகுகிறான்.

இந்த அரிய சந்தர்ப்பத்தைப்பயன்படுத்திக்கொண்டு இரு முரடர்கள் சிறுவனைக் கொலை செய்து, அவருடைய தோட்டத்திலேயே புதைத்து விடுகிறார்கள்.

பிறகு இருமுரடர்களும், அந்தோணியாரின் தந்தை கொலை செய்ததைக் கண்ணால் பார்த்ததாக பொய் சாட்சியும் கூறுகிறார்கள்.

பசு தன் கன்றை இழந்து தவிப்பதுபோல, பிரமளா தன் மகனை இழந்துகதறுகிறார். பிறகு அவர் அரசரிடம் முறையிடுகிறார்.

உடனே அரசர் வெகுண்டெழுந்து, "குற்றம் செய்தவர் எத்தகைய பெரிய மனிதராக இருந்தாலும் தண்டனையிலிருந்து தப்ப முடியாது" என்று கூறிஅந்தோணியாரின் தந்தையை கைது செய்ய உத்தரவிடுகிறார்.

இதைக்கேட்ட அந்தோணியாரின் தந்தை துடித்துப் போய்விடுகிறார். "தனமீது சுமத்தப்பட்ட வீண் பழியை மட்டுமின்றி, தன் அன்பிற்குரிய சிறுவன் இறந்துவிட்டானே" என்று கதறி அழுகிறார்.

அந்தோணியாரின் தந்தையாக மேஜர் சுந்தரராஜனும், முரடர்களாக ரிச்சர்டரே, உசிலைமணி ஆகியோர் நடித்த இத்தகைய உருக்கமான காட்சி ஜெயஸ்ரீ நாஞ்சில் இன்கார்ப்பரேட்டட் 'புனித அந்தோணியார்' படத்திற்காக பல்மனேரி என்ற ஊரில் படமாக்கப்பட்டது.

பி. டி. சாமி திரைக்கதை வசனம் எழுதும் இந்த படத்தை தயாரிப்பாளரும், நடிகருமான நாஞ்சில் துரை டைரக்ட்செய்கிறார். ஜி. ஆர். நாதன் ஒளிப்பதிவுசெய்ய கண்ணதாசன் பாடல்களுக்கு எம். எஸ். விஸ்வநாதன் இசையமைக்கிறார்.

முத்துராமன் அந்தோணியராக நடிக்கும் இந்தப் படத்தில் மனோகர், தேங்காய் சீனிவாசன். ஸ்ரீகாந்த், ஐசரிவேலன், ஐ. எஸ். ஆர். ஜெஸ்டின், லட்சுமி, ஜேயசித்ரா, குமாரிபத்மினி, பண்டரிபாய் நாஞ்சில் துரை. சாவித்திரி ஆகியோர் நடிக்கிறார்கள்.

இந்தப்படம் அடுத்தமாதம் வெளிவர இருக்கிறது.

## காஸனோலாஸ கலைமன்றம் துவக்கம்

"காஸனோலாஸ்" என்ற பெயரால் புதிய கலைமன்றம் துவக்கப்பட்டுள்ளது.

இதன் துவக்க விழா சத்தியம் தியேட்டரில் நடைபெற்றது, விழாவுக்கு நடிகை குட்டி பத்மினி தலைமை வகித்து வாழ்த்திப் பேசினார். மன்றச் செயலாளர் நித்தியானந்தன் வரவேற்றார்.

ஆல்பி—கிளபோன்சா குழுவினரின் இசை நிகழ்ச்சி நடைபெற்றது. ரங்கராஜ் நன்றி கூறினார். விழா ஏற்பாடுகளை கலைமன்ற காப்பாளர் வசந்தகுமார், முருகேசன ஆகியோர் செய்திருந்தனர்.

## பெண்ணை துரத்திய கமலஹாசன்

ரவியும், ஸ்வப்னாவும் உல்லாச ஓட்டல் ஒன்றில் உணவருந்திக் கொண்டிருக்கின்றனர். கர்வத்துடன் ஸ்வயனா கேட்கும் கேள்விகளுக்கு உற்சாகமாக பதிலளிக்கின்றான் ரவி.

திடீரென்று ரவி எழுந்து ஓடுகிறான். வியப்புடன் அவன் போவதைப் பார்க்கும் ஸ்வப்னா, கூந்தலில் ஊதாப்பூ, தரித்த பெண் காரில் ஏறிப்போவதையும், ஒரு டாக்சியில் ஏறி ரவி அவள் காரைப் பின்தொடர்ந்து செல்வதையும் காண்கிறாள்.

டிராபிக் சிக்னலில் கார் முந்தி விடுகிறது. டாக்சி நிற்க வேண்டியதாகிறது. எங்கெங்கோ சுற்றியும் கண்டு பிடிக்க முடியாமல் ஏமாற்றத்துடன் ஓட்டலுக்கே திரும்புகிறான் ரவி.

சொல்லிக் கொள்ளாமல் போனதற்காக ஸ்வப்னாவிடம் மன்னிப்பு கேட்கிறான்.

"பரவாயில்லை...ஊதாப்பூ கெடச்சுதா?" என்ற ஸ்வப்னாவின் கேள்வி ரவிக்கு அதிர்ச்சியாக இருக்கிறது.

"அவளை உங்களுக்கு தெரியுமா?" என்று கேட்கிறான்.

"ஒவ்வொரு புதன்கிழமையும் சூப்பர் மார்க்கட்டில் அவளைப் பார்ப்பேன்" என்கிறாள் ஸ்வப்னா.

"ரொம்ப தாங்க்ஸ்" என்று கூறிவிட்டு ரவி வேகமாக வெளியேறுகிறான்: அவனுடைய விசித்திரமான போக்கைக் கண்டு இடிந்து போய் நிற்கிறாள் ஸ்வப்னா.

ரவியாக கமலஹாசனும் ஸ்வப்னாவாகவிஜயலட்சுமியும் நடிக்கும் இக்காட்சி ரம்யா சினி ஆர்ட்ஸ் "ஒரு ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது" படத்தில இடம் பெற்றுள்ளது, புஷ்பா தங்கதுரையின் கதைக்கு வசனம் எழுதித் தயாரிக்கிறார் எஸ். சங்கரன். எஸ். பி. முத்துராமன் டைரக்ஷனில் உருவாகும் இப்படம் ஏப்ரல்மாதம் திரைக்கு வருகிறது.

பாபு ஒளிப்பதிவை கவனிக்கிறார். வி. தட்சிணாமூர்த்தி இசையமைக்கிறார்.

Printed by S. V. G. Sowrirajulu at the M.C.P. P.S. Press, No. 4. South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Editor: K. SOMASUNDAR, (SOLAI)